உ

பரப்பிர்ம்மணே நம:

# ஆத்மரக்ஷாமிர்த
# ஆருதாரக் க[illegible]





இஃது

சேதுநாட்டுத் திருமருதூரென்னும்

நயினார்கோயில், மேலமடம்

பரப்பிர்ம்ம

அத்வைதானுபவ சித்தாந்த ஞானதேசிக

**ஸ்ரீலஸ்ரீ திருநாகலிங்க சுவாமிகளால்**

இயற்றப்பெற்று

உ

பரமக்குடி, சரஸ்வதி விலாஸ மிஷின் பிரஸில்
அச்சிடப்பெற்றது

 1938 [விலை ரூ. 0—10—0

சிவமயம்.



நூலாசிரியர்

பரப்பிர்ம்ம

அத்வைதானுபவ சித்தாந்த ஞான தேசிக

**ஸ்ரீலஸ்ரீ திருநாகலிங்க சுவாமிகள்.**

வயது 36

20-5



ஓம் சற்குருவே நம:

# ஸ்ரீலஸ்ரீ திருநாகலிங்க சுவாமிகள் இயற்றிய

# குருஸ்துதி.

---

## அறுசீராசிரியம்.

பொன்னூர்ந்த வம்பலத்தே புரிநடனம் போற்றுகின்ற
புலியும் பாம்பும்
பன்னாளப் பதம்பரவிப் பரஞான வானந்தப்
பண்புற் றுரென்
றென்னாளும் பெரியோர்க ளெடுத்துரைத்த வெழில்ஞான
மெல்லாம் பாரா
தன்னாளி னருவினையா லரனடியைச் சிந்தியா
தருந்தி நாளும்

பாதரச மாய்மனது ஓடியலைந் தேபுரிந்த
பவங்க ளாலே
ஏதம்வரு மன்றியெம தூதர்வரு வார்கிளென
வெங்கும் வேளை
நாதநிலை கடந்தபரஞ் சோதியெனை யாட்கொள்ளு
நாளை நோக்கிச்
சேதரசாய் வந்தருளுஞ் சின்மயத்தின் றிருவடியென்
சிரமேற் கொள்வாம்.

---

பரப்பிர்ம்மணே நம:

# முகவுரை.

உலகத்தில் ஆன்மாக்கள் தாமியற்றும் நல்வினை தீவினையின் பயனாற் பல பிறவிகளை எய்துகின்றன. இப்பிறவிகள் நால்வகை யோனிகளிலும் எழுவகைத் தோற்றத்தனவாய் எண்பத்து நான்கு லக்ஷபேதமுடையனவாய்க் கன்மானுசாரமாகச் சகடக்கால் போன்று மாறி மாறி வருகின்றன. அவ்விதம் பிறவிகளை யடைந்த ஆன்மாக்கள் ஓரறிவுமுதல் ஆறறிவு ஈறாக உள்ளனவாய் நிகழும் ஆன்மாக்கள் அடிக்கடி பிறவிகளில் எய்துந்தோறும் அநுபவிக்கும் துன்பமும் ஒவ்வொரு பிறவியின் ஈறு தோறும் படும் துன்பமும் இடைநடுவே உலக வாழ்க்கையாகிய கடற்றிரையினால் மோதுண்டு படும் அவதியும் யாவரால் அளவிட இயலும்? பிறவிதோறும் ஜனனம், பிழை, வளர்ச்சி, நரை, திரை, மூப்பு, ஐ முதற் பெரும் நோய்கள், சாக்காடு முதலிய பிணிகள் பிணித்து ஆன்மாவை வருத்துவதை நினைக்க நினைக்கப் பிறவிப்பெரும் பவ்வத்தை எப்பொழுது நீந்திக்கரையேறுவது என்ற ஏக்கத்தால் அடிவயிற்றை முறுக்காதோ? மனமானது பகீர் பகீரெனத் துடியாதோ! இரு விழியுந் துயிலுறுமோ? சரீரம் இரவும் பகலும் செந்தழலின் மெழுகாயுருகாதோ! அந்தோ! உலகீர்! இது கருதியன்றோ.

“ஐ விளக்கு மூப்பு மரணாதிகளை நினைத்தால் அடிவயிற்றை முறுக்காதோ? கொடிய முயற்றுலகீர்” என இராமலிங்க சுவாமிகளும்.

"......இறப்பொடு பிறப்பையுள்ளே எண்ணினால் நெஞ்சது பகீரெனுந் துயிலுறா திருவிழியு மிரவுபகலாய்ச் செந்தமிழின் மெழுகான தங்கம்" எனத் தாயுமான சுவாமிகளும் அருளி யிருக்கின்றனர். அதிலும் ஜனனத்தைக் காட்டிலும் மரணத்தில் அதிகத் துன்பமிருப்பதை,

"சாதல் சாதல் பொல்லாமை" என மாணிக்கவாசக சுவாமிகள் விளக்கியருளினர். மேலும் ஓரறிவுமுதல் ஐயறிவு ஈறுகவுள்ள ஆன்மாக்கள் யாவும் பாவ புண்ணியங்களின்னதெனத் தெரியாது ஒன்றையொன்று கொன்று தின்று உடல் வளர்த்தல், புணர்தல் கண்ணுறங்கல் முதலிய பயனில் செயல்புரிந்து பாவத்தை யதிகரித்துக்கொண்டேயிருக்கின்றன. அவைகள் ஈசுரபக்தி பண்ணிப் புண்ணியப் பேற்றை யடைந்து பிறவிப் பிணியைக் களைவதற் கியலாதனவாய்க் கீழான பிறவிகளை எய்தி மேலும் மேலும் துன்பக் கடலில் அழுந்துகின்றன. இவ்வாறு ஒழியாத பிறவிகளை உன்னியல்லவா திருவள்ளுவரும் பிறரும், "பிறவிப் பெருங்கடல்" என்றும் அதை நீந்திக் கரையேறி ஒழிக்கவேண்டுமென்றும் வற்புறுத்தி யிருக்கின்றனர்.

இத்தகைய விரிவாகிய பிறவிகளுள் அறிவு குறைந்தனவாகிய ஏனைய பிறவிகளை யொழித்து தக்கவின்ன, தகாதனவின்னவென் றுணர்க்க உன்னும் பகுத்தறிவுடைய மானுடப் பிறவியில் வந்து பிறப்பது பெரிய கடலைக் கரங்களால் நீந்திக் கரையேறினாற்போலுமன்றோ! எவ்வாறெனின் ஏனைய பிறவிகளுள் புண்ணியத்தைப் பெருக்கும் நல்வினை இதுவென்றும்

பாவத்தைப்பல்கும் தீவினை யிதுவென்றும் பகுத்தறியும் அறிவு இன்றாம். மேலும் பாவவிமோசனத்திற் கேதுவாகும் ஈசுர பக்திப் பேரின்பம் எய்தும் ஆற்றலும் ஆங்கே இலது. இத்தகைய அந்தகாரமேவிய ஏனைய பிறவிப் பவ்வத்துழலும் ஆன்மாக்கள் எங்ஙனம் உய்வது? அந்தோ! உன்னிற் பரிதாபம்!! மானுடப் பிறவியிலோ அவ்வாறன்றி இம்மை மறுமைக்குரிய சற்கருமங் களை யறிந்தியற்றிப் புண்ணியப் பயனையடைந்து பவப்பிணிக்ளை வேருடன் களைந்து கடைத்தேறலா மென்பதற் கையமு முளதோ? இத்தகைய மேன்மையுற்ற மானுடப் பிறவியே ஆன்மாக்களுக்கு ஜனன சாகரத்தினின்றும் நீந்திக்கரையேறு தற்குரிய சாதனமாகிய மரக்கலமாகும். இதுபற்றியன்றோ,

"எண்ணரிய பிறவிதனில் மானுடப் பிறவிதான் யாதினு மரிதரிதுகாண்" எனத் தாயுமான சுவாமிகளும் இப்பிறவியின் மாண்பை வலியுறுத்தியிருக்கின்றனர்.

எய்துதற்கரிய மானுட யாக்கை யெடுத்தும் பிறவிப்பிணியி னின்றும் நீங்குவதற்கு ஒரு சிறிதும் ஓராது மனையாளும் மக்களும் வாழ்வும் தனமுஞ் சதமென்றெண்ணித் தம் வாழ் நாட்களைக் கொன்னே கழிக்கின்றாரது மடமைதான் என்னே! அவைகளின் அநித்யத்தைக் குறித்து,

அத்தமும் வாழ்வும் அகத்துமட்டே விழியம் பொழுக
மெத்திய மாதரும் வீதிமட்டே விம்மிவிம்மி யிரு
கைத்தலமேல் வைத்தழு மைந்தரும் சுடுகாடுமட்டே
பத்தித்தொடரும் இருவினை புண்ணிய பாவமுமே.

என்ற பட்டினத்தடிகளின் அருண் மொழியை அன்னார் அறிந்

திலிர் போலும். ஆதலின் மானுடராய்ப்பிறந்த ஒவ்வொருவரும் உலக போகத்தை அநித்தியமென நீத்துப் பிறவியை அறவே யொழிப்பதற்குரிய நெறியைக் கடைப்பிடித் தொழுகல் வேண்டும். அவ்வாறு செய்யாது வாழ்நாளை வீணுய்க் கழிப்போமாயின் இப்பிறவி தப்பினுல் எப்பிறவி வாய்க்குமோ? எது வருமோ? கிடைப்பதற்கரிய தேவாமிர்தம் கிடைத்தால் அதனைப் பருகாது கமரிற் பெய்தாற் போலுமன்றே! ஆதலால் இளமை கழிந்து மரணம் வருமுன் வீடடைவதற்குரிய நெறியில் விரைதல் அவசியமாகும். இதுபற்றியே,

இளமை கழியும் பிணிமூப் பியையும்
வளமை வலியிவை வாடும்—உளநாளாற்
பாடே புரியாது பால்போலு நெஞ்சினுய்
வீடே புரிதல் விதி

எனச் சிறுபஞ்சமூலருஞ் செவ்வனே யுரைத்தனர்.

அந்நெறி யாதோவெனின்:—ஐம்புலன்களைச் சுட்டொடுக்கி இறைவனடி சேர்க்கும் செந்நெறியே பிறவிப்பிணி நீக்கும் நன்னெறியாகும். இதனை, "பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார் இறைவனடி சேராதார்" எனத் தெய்வப் புலவனும்,

......பிறந்துவிட்டால்

இறவாதிருக்க மருந்துண்டுகாண் அதெப்படியோ
அறமார் புகழ்தில்லை அம்பலவாண ரடிக்கமல
மறவாதிருமனமே அது காணன் மருந்துனக்கே

எனப் பட்டினத்தடிகளும் பக்திப் பேரின்ப நெறியையே அறை கூவி யிருக்கின்றனர். இன்னெறி படிப்படி மேல்நோக்காய்

நான்கு துறைகளை யுடைத்தாம். அவை:— சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பனவாம். அவற்றில் முதல் மூன்றையும் முறையே புரிந்த பின்னரே ஞானம் பெறுவது சாலும். அப்படி யல்லாது சரியை கிரியைகளை யியற்றி யோக சாதனம் பண்ணு மலே ஞானம் பெறலாம் என்போர் ஞானமெல்லாம் வாசா ஞான மே யாகுமல்லது அநுபவ சித்தாந்த ஞானமாகாதென்பது மலை விளக்கு. இதற்குச் சான்றாய்,

ஞானத்தின் விளக்கை யேற்றி நாடியுள் விரவ வல்லார்க்
கூனத்தை யொழிப்பர் போலு மொற்றி யூருடைய கோவே

எனத் திருநாவுக்கரசும்,

நடந்து சித்திர நாடியிலே நாதமறி நெஞ்சே
உடைந்திடு முன்னேயிருந்த உடல்

எனப் பட்டினத்தடிகளும் யோகியர்க்கே ஞான மொழுங்கா மெனத் தாயுமானாரும், அருளியிருப்பதனால் ஞானம் பெறுவ தற்கு யோகமே அடிப்படையான சாதனமென்பது தெற்றெனப் புலனாகின்றது. அவ்விதமன்றி இறைவனது ஜோதி மயமாகிய சின்மய ரூபத்தைத் தம்முள்ளே தெரிசிக்கலாம் என்போரது கூற்றை ஆராயின் ஒரு அறையின் உள்ளிருக்கும் வஸ்துவை கதவைத் திறக்காமலும் கண்ணை மூடிக்கொண்டும் காணலாம் என்போரது கூற்றுக்கு நிகராகும்.

அவ்வனுபவ நிலையை உணர்த்தும் நூல்கள் அனந்தமெனி னும் பெரும்பான்மையன அநுபவத்திற்குப் பொருத்த மில்லாதனவாயும் சிறுபான்மையன அநுபவப் பொருத்த முள்ளபோதிலும் பரிபாஷையாயிருப்பதால் ஆராயப்புகுவோர்

அவற்றின் உண்மைக் கருத்தை யறியாது அபஜெயத்திற்கு ஆளாகின்றனர். ஆகையால் அத்தகைய உண்மையை அறிவிக்கத் தக்கசான்றுகளுடன் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தெளிவுறுத்துவதற்கு ஒரு வசனநூல் இன்றியமையாததென்பது அன்பர்கட்கு நெடுநாள் வேட்கையாகும். அவ்வித வேட்கையை **ஆத்ம ரக்ஷாமிர்த ஆருதாரக் கட்டளை** யென்னும் இந்நூல் நிறைவேற்றுவதாகுமென்பதை அறிஞர்கள் கற்றுணர்ந்தறியலாம். இந்நூலை நமக்குதவியருளிய ஆசிரியர் **திரு நாகலிங்க ஸ்வாமிகள்** என்னும் திருநாமம் வாய்ந்த அருளுடையடிகளாவர். அடிகளது சரிதத்தைப் பின்வரும் பாயிரத்தில் வெள்ளிடைமலை யெனத் தெள்ளிதினுணரலா மென்பதுபற்றி ஈண்டியம்பாது விடுத்து நூலின் மாண்பை நுவல்தலின் நுழைந்தனம்.

யோக ஞான நூல்களிற் பல, பாடல்களாலும் சில வசனங்களாலும் காண்பாமெனினும் இத்தகைய பொருட்டெளிவும் அநுபவப்பொருத்தமுமுள்ள நூல் பிறதொன்று காண்பதரிதென்பது எனது துணிபு. சித்தர் நூல்களிலுள்ள பொருட்டெளிவை ஒருவன் அநுபவ உண்மையாக அறியவேண்டுமானல் இந்நூலை முதலில் கண்ணுற்ற பின்னரே அவைகளின் பொருள் தெற்றெனப் புலனுறும் என்பது நிச்சயம். ஆகவே ஏனைய அநுபவ நூல்களாகிய மூடு பெட்டகங்களுக்கு இந்நூல் ஒரு திறவுகோலாகுமென்பது தேற்றம். மேலும் இந்நூல் மக்களாய்ப் பிறந்த ஒவ்வொருவருக்கும் முதலில் பிரபஞ்சத்தின் தோற்றம், ஒடுக்கம், உலகத்தின் இயற்கை, அதில் ஆன்மாக்கள் இயற்றவேண்டிய

சிவ புண்ணியங்கள், பல சமயநெறிகளின் தன்மை, அவற்றைக் கடந்த அத்துவித அபரோட்ச ஞானத்திலறியும் சித்தாந்தத் தத்துவங்கள், அவற்றை அநுபவத்தாலுணர்ந்து சித்தி பெறுதற்குரிய ஆச்சாரிய அநுக்கிரகம் முதலியவற்றை முறையோடு வரிசைக் கிரமமாக உணர்த்துவதால் இந்நூல் நமக்கு மோனமுணர்த்தும் ஒப்பற்ற ஓர் ஞானாசிரியராகுமென்பது அறியக்கிடக்கின்றது. ஆகையால் இது கண்ணுறும் அன்பர்கள் தம் அஞ்ஞான மயக்கத்தை நீத்து இறைவனருள் பெறுதற்குரிய மெஞ்ஞான வழியிற் சார்ந்து வானமுதத்தைப் பருகித் தம்முள்ளே ஜோதியைத் தெரிசித்து அழியாப்பதவி பெற்று முத்தியின்பத்திற் றிளேப்பாராக.

சுபம்.

இங்ஙனம்,

**வெ. முத்துராக்கக் கோனார்,**

சங்கத் தமிழ்ப் பண்டிதர்,

**ஸ்ரீ வில்லிபுத்தூர்—பெருமாள் நகர்.**

உ

பரப்பிர்ம்மணே நம:

# சிறப்புப் பாயிரம்.

---

இஃது
சேது நாட்டுத் திருமருதூர் முத்தமிழ் வித்வான்
## R. V. சத்திவேலாச்சாரியார் அவர்கள்
இயற்றிய
அகவற்பா.

---

சைவமாஞ் சமயந் தழைத்திடத் தோன்றி
மெய்யருள் வாதவூர் விழுமிய தொண்டர்க்
கருட்பெருஞ் சோதி யருளிய தலமாந்
திருப்பெருந் துறையின் தென்கிழக் கினிலே
மங்காத் தவமுடை மாதவர் வதியுஞ்
செங்கான மெனுஞ் சிற்றூர் தனிலே
திரு நீலகண்டர் சீர்திகழ் மரபில்
வருமுத்து வேளார் வதுவை புரிந்த
சொர்ன வல்லியெனுந் தோகையின் வயிற்றிற்
சித்தினி ரண்டாம் புத்திர ராக
தவமுயர் கெர்பந் தனையடைந் திடவுஞ்
சிவனடி யார்கள் தெரிசனந் தரவுந்
திங்கள் பத்தாகிச் சேயிழை யாட்குச்
சங்கா னருளாற் றன் வயிற்றுற்ற
கருவே தனையைக் காட்டிய காலம்
அடுத்த தெருவில் அகம்படியார் குலங்
கொடுத்த முதியாள் கோதையின் கனவிற்

பாகமாய்ச் சென்று
நாகலிங் கேசன்
இன்னவள் தனக்கு
பின்ன மிலாவாண்
என்பெய ரிடவு
தென்றிசை நோக்கிச்
கலியு காப்தம்
மலிவுசேர் சகத்திரம்
ஆங்கில மாயிரத்
தோங்கிய விரண்டி
சுபகிரு தாண்டு
உபமிகு மிருபத்
குருவா ரத்திற்
வரு பூர்வபக்ஷ
மரு வுத்ராட
தைந்து நாழிகை
வந்திடச் செவ்வாய்
சூரியன் புதனுஞ்
காரியும் நாலிற்
சந்திரன் குருவுஞ்
கந்தமா மோக்ஷ
சூழ் சுபயோக
சீழ் புவிமீது
கனவு முன்கண்ட
சொனதென வென்றுற்

பர வடிவாகி
நன் மனமாக
இத்தினந் தனிலே
பிறக்கு மதற்கு
மௌனவுரை செய்தே
சென்றன ரன்றே
கதியுறு வைந்தாம்
மன்னிய மூன்றில்
தலகொன்பான் சதத்
துய ரக்டோபர்
துலா ரவியதனில்
தொன்றுந் திகதி
குளிர்தரு மிரவில்
வழங்கிய சப்தமி
மதுபெறு மிருபத்
தருகனி லெக்கினம்
வள ரிரண்டினிலே
சுக்கிரன் ராகும்
கனிவுறுமைந்திற்
சார்ந்திட வெட்டிற்
காரகன் கேதுஞ்
சுபதினந் தனிலே
நெறிமகன் பிறக்க
காரிகை வந்து
சொற்பனத் தினிலே

தோன்றிய யாவுஞ்
ஈன்றவள் மற்ரு
ஒரு மாதுரைத்த
திரு நாகலிங்கத்
இட்டன ரைந்தா
றிட்டமதாகச்
பள்ளியில் வைத்தார்
இருநான் காண்டில்
திரிபுர தகனச்
முன்னுட் புரிந்த
தன்ஞல் வருமென்னுந்
பக்தியு மன்பும்
சக்தியி நூலைத்
இச்சை யுண்டாகி
பச்சமாய் வயது
திருமணஞ் செய்து
மருமண வுலக
அலைவாய்ப் பட்டங்
உலைவாய்ப் பட்டே
துன்புறுங் காலத்
அன்பராய்த் தோன்றி
நாக நாதனுமே
வாகுட னின்னை
இன்னே சிலநா
பின்னே வருவேன்

சொல்லின ளிதனை
ரிதயங் களித்து
உறுதியின் படியே
தெய்வப் பெயரே
மியல்புறு வயதிற்
செந்தமி ழுணர
பரமனு ரருளால்
எழிலுறு தந்தை
சிவனடி சேர்ந்தார்
முதிர் புண்ணியமே
தன்மை யதாகப்
பதிந்திட வடியார்
தானறிந் திடவே
யிருந்திடு நாளிற்
பதினெட் டாண்டிற்
சேய்களைப் பெற்று
வாழ்க்கையி லழுந்தி
கலை துரும்பெனவும்
யுருகிய மெழுகாய்த்
தொருதினங் கனவில்
யழகியாள் பாகன்
நன்முத்தி தரவே
வரச்சொன ரெனவே
ளிங்கே கழித்த
பெறுவே னென்வே

திடமாய்ப் பலநாற் றெரிந்திட வொருநாள்
விடநாகம் போய் விழுங்கிய தாகச்
சொர்ப்பனங் காணத் துடி பயமாகி
அர்ச்சனை புரியும் அரனடி தேடத்
தக்க விருபான் றகு மேழ்வயதிற்
சுக்கில வாண்டு தொடர் சித்திரையின்
மூன்றாந் திகதி முறைமனை வாழ்க்கை
ஈன்றா ளுறவு மின்றியே நீங்கிப்
பண்டே யழைத்த பார்வதி பாகனை
கண்டிடு காதல் கருத்தில் மிக்குற
கன்றது நாடுங் கபிலையைப் போல
சென்றதி விரைவாய்த் தீவிர முடனே
கருமரு தூலங் கலவாத விடந்
திருமரு தூரைச் சேர்ந்தே திருமுன்
கண்ணீர் பெருக்கிக் கருணையங் கடலே
புண்ணீ ரொழுகும் பூவையர் தீய
வாழ்வை விடுத்து வாவென் றுரைத்துஞ்
தாழ்வைச் சதமாய்ச் சந்தத முன்னிப்
பாயப் புலிமுன் பலிமான் கன்றாய்
மாயைப் படையெதிர் மன்னவைத் தாயெனும்
பாடலை யோதிப் பன்முறை தொழுதே
ஆடர வணிவோர் அடியரைத் தேடி
திடவா சுகிக்கரை திகழ்ந்திடு மேலை
மடமே வண்ணா மலைச்சுவாமி யிடந்
தொண்டது செய்து துதிபுரி காலை

அண்டரு மறியா வரனடித் தாகங்
கொண்டிடு போது குடிமனை மக்கள்
கண்டழு ஜீவ காருண் யத்தாற்
குருபர னாசைக் குணமொருபக்கம்
வருமனை மக்கள் வாஞ்சை யோர்பக்கம்
இருதலைக் கொள்ளி யெறும்பது போலக்
கருகிய பொழுது கனவினிற் பரமன்
இங்கிருந் திடுவாய் யிதமுட னருள்வோம்
சங்கட மொழிவாய் ததியென வுரைக்க
அண்ணா மலையா மாச்சாரிய ராற்
றண்ணார் பஞ்சாட் சர முறைகொண்டு
சிரவண மனனஞ் செய்திடு நாளில்
அரவணி சிவனே யன்றொரு வேளை
துயிலிடை வந்து தோன்றியே குருவாய்
நியமன மவுன நிலையது காட்டி
இருவினை யொப்புவந் தெய்திய வதனாற்
தரு பூரணத்தின் தன்மையை யுணர்த்த
ஆரணப் பொருளே அரியாங் கோட்டையிற்
காரண குருவாய்க் கருணையி னுருவாய்
மாதுக்கோர் பாகம் வைத்தவர் தாமே
சேதுக் கரசெனும் திருநாமம் பெறும்
அன்னையாய்த் தோன்றி அன்புறு குழந்தாய்!
உன்னைநீ யறியும் உண்மையாம் வழியை
அருளுவோ மென்றே யருகினி லழைத்தே
தெருளுறு தெக்ஷணை தேசிக மூர்த்தமாய்ப்

பன் முத்திரையிற்
சின் முத்திரையைக்
காசினி யோடிக்
வாசி யேற்றத்தின்
அற்ப வுடற்கு
கற்ப முறையுங்
அன்றே யுணர்ந்து
சென்றே யுணரும்
நெறிவரு பொருளை
அறிந்திருள் நீங்கி
பன்னெறி யென்னும்
முன்னுள வனுபவ
நாட்டிற் புகன்ற
பூட்டைத் திறந்து
வீட்டைத் திறந்து
திறவுகோல் ஞானத்
வருமாத் துமரட்
ஆறு தாரக்
பேறு வுலகப்
அருளின ரிதனை
மருளது நீங்கி
சிவபத மதனிற்

பயனிலை யென்றே
தெளிவுட னருளி
கலங்கிடா வண்ணம்
வன்மை யுரைத்தே
ஆதர வாகக்
காண்டற் கருளிய
அனுபவ நிலையிற்
சிவானு பூதியின்
நிலமதி லுள்ளோர்
அருள்வழி சென்றே
பவநெறி யகற்றி
மூதறி வாளர்
நல்வாசகத்தின்
பொய்யிருள் கெடவே
வெளியொளி காட்டுந்
தினகர னாக
சாமிர்த மெனும்
கட்டளை யதனை
பேருத வியதாய்
ஆராய் வோர்கள்
மாலய னறியாச்
சேர்ந்திடுவாரே.

சுபம்! சுபம்!! சுபம்!!!

ஓம் சற்குருவே நம:

# குரு பரம்பரை நூற்சிறப்பு.

இஃது

ஸ்ரீ வில்லிபுத்தூர்—பெருமாள் நகர், சங்கத் தமிழ்ப் பண்டிதர்

**வெ. முத்துராக்கக் கோனார் இயற்றியது.**

எழுசீர்க்கழி நெடில் ஆசிரியம்.

1. சொல்லரிய பக்குவஞ்சேர் ஜனகாதி முனிவோர்கள்
 தொழுதருகிற் சூழ்ந்திறைஞ்ச
நல்லரிய சித்தாந்த நன்னெறியை யொருசொலால்
 நன்குணர்த்தும் ஞான மோன
எல்லொளிரும் பரம்பொருளின் இனியதிருக் கயிலாயத்
 தேகவெற்பி லிருக்குந் தூய
பல்லரிய சித்தர்கணப் பரம்பரையாம் மரபில்வரு
 பானுவைநேர் பரம மூர்த்தி

2. இரத்தின னந்தமெனு மானந்தன் மருதூரில்
 ரவிமதிசேர் ராஜ யோகப்
பத்தியாம் நெறியறிந்து பாமுனியண் ணுமலைக்கு
 பரிவுடனே பரசித் தாந்தத்
தத்துவத்தை யருளியுமுத் தரகோச மங்கையூர்
 சார்ந்தப்பாற் சமாதி யாகி
அத்தனருள் அருள்பெற்றே ஆனந்தத் துரியநிலை
 அடைந்தனன்பே ரருட்செல் வத்தோன்

3. திருமருதூர் தனில்மேவும் திருவண்ணா மலைமுனிவன்
திருவருளே திறமாய்ப் பெற்ற
அருமைநிறை திருச்சேதுக் காசெனும்பேர்க் கருணையுடை
அம்மைபால் அருள்கொள் சீடன்
கருமருவு காயத்தை நிர்மலம தாகவே
கமலாச னங்கொள் பெரியோன்
திருமருவு ஸ்ரீலஸ்ரீ திருநாக லிங்கமெனுந்
திருவருட் செல்வ முனிவன்

4. குருமுனிவன் தத்துவஞ்சேர் கோமுனிவன் சேதம்மை
குழந்தையாம் கோதில் முனிவன்
அருமைபெறும் அன்பருய்ய ஆத்ம ரக்ஷாமிர்தவா
ருதார அளவை நூலாம்
பெருமைபெறுங் கொடையளித்துப் பேரின்ப நெறியறியும்
பெற்றிமழை பெய்தான் பாரீர்!
அருந்திருவும் அத்துவிதத் திற்றுவித அபரோக்ஷக்
காக்ஷியன்னால் அளிக்கும் தானே

5. பன்னெறிக் கடலிற் பயின்றுழன் றலைந்தே
பாசமாம் அலைவயிற் சிக்கும்
என்னையே தான்வந் தின்புடன் கொண்டு
எழில்பெறும் கட்டளை நூலால்
அன்னை தன் சேயைக் கோப்பது போலும்
அறவெனைக் கோத்துமே யன்பால்
நன்னெறி நாவாய் நல்கினன் உலகீர்
நம்பவக் கடல்தனைக் கடப்பீர்.

# குரு ஸ்துதி.

அறுசீராசிரியம்.

---

பெருமாழிப் பிறவிதனிற் பிறந்துழன்றே செய்தபெரும்
பிழைக ளாலே
கருவாழி வருமெனவுங் காலபய முறுமெனவுங்
கலங்கு வோர்க்குக்
குருவாகிப் பரம்பொருளே குற்றமறக் கைகாட்டுங்
குறிப்பாய் வந்த
திருநாக லிங்கமெனுந் தேசிகனின் றிருவடியென்
சிரமேற் கொள்வாம்.



# திரு நந்தி தேவர் வேண்டிய பதினாறு பேறு.

## கலி நிலைத்துறை

மறைக ணிந்தனை சைவநிந்தனை பொறா மனமுந்
தறுக ணைம்புலன் களுக்கேவல் செய்யுறாச் சதுரும்
பிறவி தீதெனப் பேதையர் தம்மொடு பிணக்கும்
உறுதி நல்லறஞ் செய்பவர் தங்களோ டுறவும்

யாது நல்லன்பர் கேட்கினு முதவுறா மியல்பும்
மாத வத்தினோ ரொறுப்பினும் வணங்கிடு மகிழ்வும்
ஓது நல்லுப தேசமெய் யுறுதியு மன்பர்
தீது செய்யினுஞ் சிவச்செய லெனக்கொளுந் தெளிவும்

மனமும் வாக்கும் நின்னன்பர்பா லொருப்படு செயலும்
கனவினு முன தன்பருக் கடிமையாங் கருத்தும்
நினைவில் வேறொரு கடவுளை வழிபடா நிலையும்
புனித நின்புகழ் நாடொறு முரைத்திடும் பொலிவும்

தீமை யாம்புறச் சமயங்க ளொழித்திடுந் திறனும்
வாய்மை யாகவே பிறர்பொருள் விளைவுறா வளனும்
ஏழுறும் பரதார நச்சிடாத நன் னோன்புந்
தூய்மை நெஞ்சின் யானெனதெனுஞ் செருக்குறாத் துறவும்

## கலி விருத்தம்.

துறக்கமீ துறையினுந் நரகிற் றேயினு
மிறக்கினும் பிறக்கினு மின்பந் துய்க்கினும்
பிறைக்கொழுந் தணிசடைப் பெரும விவரம்
மறத்திடா தெனக்குநீ வழங்கல் வேண்டுமால்.

## கலித்துறை.

துதிவாணி வீரம் விசயஞ் சந்தானந் துணிவுதனம்
மதிதானி யஞ்சவு பாக்கியம் போக மறிவழகு
புதிதாம் பெருமை யறங்குல நோயகல் பூண்வயது
பதினறு பேறுந் தருவாய் மதுரைப் பராபரனே.

பரப்பிர்ம்மணே நம:

# பிரபஞ்ச உற்பத்திக் கட்டளை.

## பொருள் வணக்கம்.

நித்தியமாய் நிர்மலமாய் நிஷ்களமாய் நின்ற
துரியா வதீதச்
சுத்தபரி பூரணமாய்ச் சுருதிமுடி வதையுணர்ந்த
தூய யோகர்க்
கத்துவிதத் திற்றுவித வபரோக்ஷக் காக்ஷியதா
யணிமா வாதி
சித்திமுத்திச்சீர்கொடுக்குஞ் சிற்பரத்தை எந்நாளும்
சிந்தை செய்வாம்.

## நூல்.

சுத்தமுத்த பரிபூரணமாயிருக்கின்ற பிரமத்தில் அக்கினியிற் சூடுபோல அபின்னமாக ஒரு சத்தியுண்டு. அந்தச்சத்தி அவ்வதீதப்பிரமத்தில் அடங்கிநிற்கும்போது அதற்குச் சுத்தப் பிரமம் என்று பெயர். அந்தச்சத்தி விசிரிம்பித்துச் சுத்தப் பிரமத்தை வியாபிக்கும்போது அப்பிரமம் பரைவியாபகத்துக்குள் இருந்தபடியால் அதற்குப் பரப்பிரமம் என்று பெயராயிற்று. இதற்குச் சான்றாக மாணிக்க வாசக சுவாமிகளும்

உடையா ளுன்ற னடுவிருக்கு
முடையா ணடுவுள் நீயிருத்தி எனக் கூறினர்.

இனியந்த அபின்னசத்திக்கு ஸ்திரீகளுக்குப் புருஷ சமுகத்தில்

இன்பஞ் செனித்தாற்போல பிர்மசமூகத்தி லின்பமுண்டாகி விகிதகுணமாகிய நாதந்தோன்றி நாதத்தில் விந்து தோன்றியது. இதனை அருணகிரி நாதரும்,

"நாத விந்துகளாதி நமோ நம:" எனத் துதித்தனர். இனியந்தவிந்துவிற் சதாசிவமும், சதாசிவத்தில் மஹேஸ்வரனும் மஹேஸ்வரனில் உருத்திரனும், உருத்திரனில் விஷ்ணுவும், விஷ்ணுவிற் பிர்மாவும், மூலப்பிரகிருதியும், மூலப்பிரகிருதியிற் ஜீவர்களும், முக்குணங்களும் தோன்றின.

முக்குணமாவது:—

சத்துவம் ரஜஸு தமஸு என மூன்றும். இவை ஒவ்வொன்றிலு மூன்று குணங்களுண்டாம். அவையாவன:—

| | |
|---|---|
| சத்துவத்தில் | சத்துவம் |
| சத்துவத்தில் | ரஜஸு |
| சத்துவத்தில் | தமஸு |
| ரஜஸில் | சத்துவம் |
| ரஜஸில் | ரஜஸு |
| ரஜஸில் | தமஸு |
| தமஸில் | சத்துவம் |
| தமஸில் | ரஜஸு |
| தமஸில் | தமஸு என்பவைகளாம். |

அந்த முக்குணங்களிலிருந்து சராசரப் பிரபஞ்சங்களுந் தோன்றும். இதற்குச் சான்றாகத் தாயுமானவரும்,

முக்குணத்தா லெல்லா முளைக்கப் பிரகிருதிக்
கிக்குணத்தை நல்கியதா ரெந்தாய் பராபரமே எனக் கூறினர்.

இனி முக்குணங்களிலிருந்து சராசரப் பிரபஞ்சங்களும் தோன்றுமுறை எங்ஙனமெனின் மேற் சொல்லிய முக்குணங்களில் சத்துவம் சுத்தமாயை யெனவும் ரஜஸு அசுத்தமாயை யெனவும் தமஸு விட்சேபம், ஆவாரணம் என இரண்டு சத்திகளாகவும் பிரியும். இவற்றுள் சுத்தமாயை மேற்சொல்லிய பஞ்சகர்த்தா ஐவருக்கும் தனுகாரணபுவனபோகத்திற்குக் காரணமாக இருக்கும்.

அசுத்தமாயை ஜீவர்களுக்குத் தனுகாரணபுவனபோகத்திற்குக் காரணமாக இருக்கும். இதனை ஜீவர்களுக்கு அனுதியிலே தொன்றுதொட்டுவந்த ஆணவ மலமெனச் சத்துக்கள் சொல்லுவர். இவற்றைக் காரணமாகக்கொண்டு ஜீவர்களுக்குச் சூக்ஷுமம் ஸ்தூலமாகிய சரீரங்களைப் பிரமாவும் சிருஷ்டிப்பர். அஃதெப்படி யெனின்,

மேற்சொல்லிய தமோ குணத்தில் உற்பவித்த விக்ஷேபம் ஆவாரணமெனும் இரண்டு சத்திகளுள்ளும் விக்ஷேப சத்தியினின்றும் சத்ததன்மாத்திரையான ஆகாயந் தோன்றிற்று. ஆகாயத்தினின்றும் பரிசதன்மாத்திரையான வாயு தோன்றிற்று. வாயுவினின்றும் ரூபதன்மாத்திரையான அக்கினி தோன்றிற்று. அக்கினியினின்றும் இரசதன்மாத்திரையான அப்பு தோன்றிற்று. அப்புவினின்றும் கந்ததன்மாத்திரையான பிருதிவி தோன்றிற்று. இந்தப் பஞ்சபூதத்திற்குக் காரணமாகிய விக்ஷேப சத்தியின் முக்குணங்களும் பஞ்சபூதங்கள் ஒவ்வொன்றிலும் மூன்று குணங்களாகச்சேர்ந்து அற்பங்கருவானபடியால் அதன் காரியமான பஞ்சபூதங்களும் முக்

அப்புவைப்போல விடயங்களிற் பற்றியிழுக்கின்றது. இவ்வாறு இழுக்கின்ற விருத்திக்குச் சித்தமென்று பெயர். அந்தக்கரணத்தில் பிருதிவியினம்சங்கூடினதற்கடையாளம், அந்தக்கரணமும் பிருதிவியைப்போல கடினமாக நின்று நானென்றபிமானிக்கின்றது. இவ்விதம் அபிமானிக்கின்ற விருத்திக்கு அகங்காரமென்று பெயர். இன்னும் ஆகாய முதலான பஞ்சபூதங்களின் சத்வாம்சம் ஐந்தையும் தனித்தனியே வைத்தது சுரோத்திராதி ஞானேந்திரியமென்று சொல்லப்படும்.

இவைகளில் சுரோத்திரம் ஆகாயத்தினம்சமானபடியால் ஆகாயத்தின்குணமான சத்தத்தைமாத்திரம் அறியும். தொக்கு வாயுவினம்சமானபடியால் வாயுவின்குணமான பரிசத்தைமாத்திர முணரும். சட்சு அக்கினியினம்சமானபடியால் அக்கினியின்குணமான ரூபத்தை மாத்திரம் அறியும். சிங்ஙுவை அப்புவினம்சமானபடியால் அப்புவின்குணமான ரசத்தை மாத்திரம் அறியும். ஆக்கிராணம் பிருதிவியினம்சமானபடியால் பிருதிவியின் குணமான கந்தத்தைமாத்திரம் அறியும். இவை ஐந்திலும் அந்தக்கரணமைந்துங்கூடிநின்று ஐந்துவிடயங்களையும் அறியும். இந்தச் சத்துவ குணத்திலுண்டான அந்தக்கரணமைந்தும் ஞானேந்திரியமைந்தும் ஆகப்பத்தும் சத்துவாம்சமானபடியால் ஞானசாதனமாயின.

இன்னும் ஆக[illegible]லான பஞ்சபூதங்களினுடைய ரஜஸாம்சம் ஐந்தில் [illegible]றையும் இரண்டிரண்டாகப்பகுத்து ஒருபாதி ஐந்தை[illegible]கூட்டி வைத்தது வியானாதி பஞ்ச

குணங்களுடனே பிறந்தன. இந்தப் பஞ்சபூதங்கட்குத் தன் மாத்திரைகளென்றும் அபஞ்சீகரணபூதங்களென்றும் சூக்ஷுமபூதங்களென்றும் முக்குணபூதங்களென்றும் நாமம் சொல்லப்படும். இந்தச் சூக்ஷுமபூதங்களினின்றும் சூக்ஷுமசரீரங்களும் ஸ்தூலபூதங்களும் தோன்றும்.

அஃதெப்படியெனின் ஆகாயம் முதலான பஞ்சபூதங்களின் சத்வாம்ஸம் ஐந்தையும் இரண்டிரண்டாகப்பகுத்து ஒருபாதி ஐந்தையும் ஒன்றாகக் கூட்டிவைத்தது அந்தக்கரணம்.

இந்த அந்தக்கரணத்தில் ஆகாயத்தினம்சங்கூடினதற்கடையாளம், அந்தக்கரணமும் ஆகாயத்தைப்போல சகலமான கேள்விகட்கும் இடம் கொடுத்துத் தரிக்கின்றது. இப்படித் தரிக்கின்ற விருத்திக்கு உள்ளமென்று பெயர். அந்தக்கரணத்தில் வாயுவினம்சங்கூடினதற்கடையாளம், அந்தக்கரணமும் வாயுவைப்போல அலைகின்றது. இப்படி அலைகின்ற விருத்திக்கு மனமென்று பெயர். அந்தக்கரணத்தில் அக்கினியினம்சங்கூடினதற்கடையாளம், அந்தக்கரணமும் அக்கினியைப்போல ஈதின்னதின்னவென்று விளக்குவிக்கின்றது. இப்படி விளக்குவிக்கின்ற விருத்திக்குப் புத்தியென்று பெயர். அந்தக்கரணத்தில் அப்புவினம்சங்கூடினதற்கடையாளம், அந்தக்கரணமும்

---

குறிப்பு:—

தன் மாத்திரை—ஓரறிவுடையது.

அபஞ்சீகரணம்—ஒன்றோடொன்று கலவாது தனித்தனியேயிருப்பது. சூக்ஷுமம்—ஊனக்கண்ணுக்குத்தோன்றாதிருப்பது.

அப்புவைப்போல விடயங்களிற் பற்றியிழுக்கின்றது. இவ்வாறு இழுக்கின்ற விருத்திக்குச் சித்தமென்று பெயர். அந்தக்கரணத்தில் பிருதிவியினம்சங்கூடினதற்கடையாளம், அந்தக்கரணமும் பிருதிவியைப்போல கடினமாக நின்று நானென்றபிமானிக்கின்றது. இவ்விதம் அபிமானிக்கின்ற விருத்திக்கு அகங்காரமென்று பெயர். இன்னும் ஆகாய முதலான பஞ்சபூதங்களின் சத்வாம்சம் ஐந்தையும் தனித்தனியே வைத்தது சுரோத்திராதி ஞானேந்திரியமென்று சொல்லப்படும்.

இவைகளில் சுரோத்திரம் ஆகாயத்தினம்சமானபடியால் ஆகாயத்தின்குணமான சத்தத்தைமாத்திரம் அறியும். தொக்கு வாயுவினம்சமானபடியால் வாயுவின்குணமான பரிசத்தைமாத்திரமுணரும். சட்சு அக்கினியினம்சமானபடியால் அக்கினியின்குணமான ரூபத்தை மாத்திரம் அறியும். சிங்குவை அப்புவினம்சமானபடியால் அப்புவின்குணமான ரசத்தை மாத்திரம் அறியும். ஆக்கிராணம் பிருதிவியினம்சமானபடியால் பிருதிவியின் குணமான கந்தத்தைமாத்திரம் அறியும். இவை ஐந்திலும் அந்தக்கரணமைந்துங்கூடிநின்று ஐந்துவிடயங்களையும் அறியும். இந்தச் சத்துவ குணத்திலுண்டான அந்தக்கரணமைந்தும் ஞானேந்திரியமைந்தும் ஆகப்பத்தும் சத்துவாம்சமானபடியால் ஞானசாதனமாயின.

இன்னும் ஆகாய முதலான பஞ்சபூதங்களினுடைய ரஜஸாம்சம் ஐந்தில் ஒவ்வொன்றையும் இரண்டிரண்டாகப்பகுத்து ஒருபாதி ஐந்தையும் ஒன்றாகக்கூட்டி வைத்தது வியானாதி பஞ்ச

வாயுக்கள். இவைகளில் வியானவாயு ஆகாயத்தினம்சமானபடியால் ஆகாயத்தைப்போல சர்வாங்கமும் வியாபித்திருக்கும். பிராணவாயு வாயுவினம்சமானபடியால் வாயுவைப்போல மூலாதாரத்திலிருந்து நாசியாதி பரியந்தம் அலையும். அபானவாயு அக்கினியினம்சமானபடியால் அக்கினியைப்போல ஜாடராக்கினியாக உஷ்ணித்துக்கொண்டு குதத்தைப்பற்றி நின்று உண்ட அன்னபானாதிகளை ஜீரணிப்பிக்கும். சமானவாயு அப்புவினம்சமானபடியால் சரீரநடுவான நாபிஸ்தானத்தில்நின்று உண்ட அன்ன ரசங்களை அப்புவைப்போல் இழுத்து 72000 நாடிநரம்புகளிலும் கலப்புவிக்கும். உதானவாயு பிருதிவியினம்சமானபடியால் பிருதிவியைப்போல கடினமாக நின்று உண்ட அன்னபானாதிகளைக்கடையும். இந்தப் பஞ்சவாயுக்களையுமல்லாமல்

வாந்தி பண்ணுவிக்கிறவன் நாகனென்றும்
இமைத்து விழிப்பிக்கிறவன் கூர்மனென்றும்
குறுகுறுத்துத் தும்மச்செய்கிறவன் கிரிகரனென்றும்
ஓடுவித்தல் உலாவுவித்தல் செய்கிறவன் தேவதத்தனென்றும்
வீங்கச்செய்பவன் தனஞ்செயனென்றும்

பஞ்சவாயுக்களும் உண்டு. இவைகளும் பிராணவாயுவின் குணங்களேயாகும்.

இன்னும் ஆகாயமுதலான பஞ்சபூதங்களுடைய ரஜசாம்சம் ஐந்தையும் தனித்தனியே வைத்தது வாக்காதி கர்மேந்திரியம் என்று சொல்லப்படும். இவைகளில்

ஆகாயத்தினிடமாக வாக்கு வசனிக்கும்
வாயுவினிடமாகப் பாணி இடுதல் ஏற்றல் செய்யும்

தேயுவினிடமாகப் பாதம் நடக்கும்
அப்புவினிடமாகப் பாயுரு மலஜலாதிகளைக் கழிக்கும்
பிருதிவியினிடமாக உபஸ்தஞ் சுகத்தைப்பண்ணும்.
இந்தக் கர்மேந்திரியங்கள் ஐந்திலும் வாயுக்கள் ஐந்தும் ஒன்றாய்க் கூடினதுகொண்டு ஐந்து தொழில்களையுஞ் செய்துமுடிக்கும். இந்தக்கர்மேந்திரியங்கள் ஐந்தும் வாயுக்கள் ஐந்தும் ஆகப்பத்தும் ரஜசாம்சமானபடியால் கிரியாசாதனமாயின.

மேற்சொல்லிய அந்தக்கரணம் ஐந்து, ஞானேந்திரியம் ஐந்து, வாயுக்கள் ஐந்து, கர்மேந்திரியம் ஐந்து ஆக இருபது தத்துவங்களும் சூக்ஷுமசரீரமென்று சொல்லப்படும். இதில் சத்துவகுணமும் ரஜோகுணமும் செலவழிந்தன. தமோகுணம் மாத்திரம் சேடித்து நின்றது. இப்படிச் சூக்ஷுமசரீரசிருஷ்டி சொல்லப்பட்டது.

இனி ஸ்தூலசரீரசிருஷ்டி எங்ஙனமெனின், முன் சூக்ஷுமசரீர சிருஷ்டியிற் சேடமான தமோகுணபூதங்கள் ஐந்தையும் இரண்டிரண்டாகப்பகுத்து ஒருபாதி ஐந்தையும் நன்னான்காகப்பகுத்து மற்றொருபாதி ஐந்திலும் தன்னம்சத்துடனே கூட்டாமல் மற்றை நான்குபூதங்களுடன் அரைக்கால் அரைக்கால் மாத்திரையாகக் கூட்டுவது பஞ்சீகரணம் என்று சொல்லப்படும். இப்படி பஞ்சீகரணம் பண்ணின ஸ்தூலபூதங்களிலே ஆகாயத்தில் ப்ரிசரூப ரசகந்தமாகிய நான்கு குணங்களும் வியாப்பியமான்படியினால் அதிருசியமாய்ப்போக நிசகுணமாகிய சத்தம் திருசியமாம். வாயுவிலே ரூபரசகந்தங்களாகிய மூன்றுகுணங்களும் வியாப்பியமானபடியால் அதிருசியமாய்ப்போகக் காரணகுணமாகிய

சத்தமும் நிசகுணமாகிய பரிசமும் திருசியமாம். அக்கினியிலே ரசம் கந்தமாகிய இரண்டு குணங்களும் வியாப்பியமானபடியால் அதிருசியமாய்ப் போகக் காரணகுணங்களாகிய சத்தபரிசமும் நிசகுணமாகிய ரூபமுந் திருசியமாம். அப்புவிலே கந்தகுணம் வியாப்பியமானபடியால் அதிருசியமாய்ப் போகக் காரணகுணங்களாகிய சப்த பரிச ரூபமும் நிசகுணமாகிய ரசமுந் திருசியமாம். பிருதிவியிலே காரணகுணங்களாகிய சப்த பரிச ரூப ரசமும் நிஜ குணமாகிய கந்தமும் திருசியமாம். முன் சூக்ஷுமபூதங்களினின்றும் சூக்ஷுமசரீரங்களைச்சிருஷ்டித்தாற்போலபஞ்சீகரணம் பண்ணின ஸ்தூலபூதங்களினின்றும் ஆறு தத்துவமாகிய ஸ்தூல சரீரத்தைப் பிரமன் சிருஷ்டித்தார். இவற்றுள் ஆறு தத்துவங் களாவன:— சர்மம், உதிரம், மாமிசம், சநயு, அஸ்தி, மச்சை என்னும் இவைகளாம். இதற்கு விபரம்:—

1. சர்மம் = தோல்
2. உதிரம் = இரத்தம்
3. மாமிசம் = தசை
4. சநயு = நரம்பு
5. அஸ்தி = எலும்பு
6. மச்சை = மூளை யென்னுமிவைகளாம்.

இப்படி ஆறு தத்துவங்களாயிருக்கின்ற ஸ்தூலசரீரத்திலே இருபது தத்துவங்களாயிருக்கின்ற சூக்ஷுமசரீர மிருக்கின்றது. அஃதெப்படியெனின் கர்மேந்திரியங்களுள் வாக்கும் ஞானேந்திரியங்களுள் சிங்ஙுவையும் வாயிலிருக்கும். உதானவாயுவும் மனதும் கண்டத்திலிருக்கும். பிராணவாயுவும் புத்தியும்

இருதயத்திலிருக்கும். சமானவாயுவும் சித்தமும் நாபிக்க மலத்திலிருக்கும். அபானவாயுவும் பாயுருவும் குதத்திலிருக்கும். வியானவாயுவும் தொக்கும் அகங்காரமும் சர்வாங்கமும் வியாபித்திருக்கும். உச்சியிலே உள்ளமும் கருவிழி நுனியிலே சட்சேந்திரியமும் மூக்கு நுனியிலே கிராண இந்திரியமும், காதிற்குள்ளே சுரோத்திரேந்திரியமும், காலில் பாதமும், கையில் பாணியும், குய்யத்தில் உபஸ்தமுமாகவிருக்கும். இப்படி ஆறு தத்துவங்களுடைய ஸ்தூலசரீரத்திற்குடிபுகுந்த சூக்ஷ்மசரீரதத்துவங்கள் இருபது. ஆகத்தத்துவங்கள் இருபத்தாறும் பஞ்சபூதங்களின் காரியமானபடியால் ஒருமைப்பாடாகக் காரிய சரீரமென்று சொல்லப்படும்.

மேற்சொல்லிய ஆறு தத்துவங்களையுடைய ஸ்தூலசரீரத்தை ஜீவர்களின் கர்மத்திற்குத் தகுந்தாற்போல பிரமன் எத்தனை வகையிற் சிருஷ்டிப்பாரெனின் நால்வகைப் பிறப்பில் எழுவகைத் தோற்றமாய் 84 லக்ஷம் யோனிபேதமாய் ஓரறிவு முதல் ஆறறிவு ஈறுகளுளதாய் மூவகைச்சாதியாய்ச் சுவர்க்க மத்திய பாதலமென்னும் மூன்றுலகங்களிலும் சிருஷ்டிப்பார். இவற்றுள் நால்வகைப் பிறப்பாவன :—

| பிறவிகள் | விபரங்கள் |
|---|---|
| 1. சராயுசம் | 1. கருப்பையிற் றோன்றுவன |
| 2. அண்டசம் | 2. முட்டையிற் றோன்றுவன |
| 3. சுவேதசம் | 3. வியர்வையிற் றோன்றுவன |
| 4. உற்பிசம் | 4. வித்து, வேர், கிழங்கு, பூமியிலும் உற்பத்தியாகும். |

## எழுவகைத் தோற்றமாவன.

தேவர், மனிதர், மிருகம், பக்ஷி, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரமென்னும் இவைகளாம்.

இவற்றுள் 84 லக்ஷம் யோனி பேதமாவன:—

| | | | |
|---|---|---|---|
| 1. | தேவர் | = | பதினான்கு நூறாயிரம் |
| 2 | மானுடர் | = | ஒன்பது நூறாயிரம் |
| 3. | மிருகம் | = | பத்து நூறாயிரம் |
| 4. | பறவை | = | பத்து நூறாயிரம் |
| 5. | ஊர்வன | = | பதினொன்று நூறாயிரம் |
| 6. | நீர்வாழ்வன | = | பத்து நூறாயிரம் |
| 7. | தாவரம் | = | இருபது நூறாயிரம் |

ஆக 84 லக்ஷயோனி பேதமாம்.

இவற்றுள் தாவராதிகளாகிய மரஞ்செடி, கொடி இவைகளுக்கு சிதோஷ்ணாதிகளாகிய பரிசத்தையறியும் ஓரறிவும், சிப்பி, சங்கு முதலியவைகளுக்கு பரிச ரசங்களை அறியும் ஈரறிவும், எறும்பு, கரையான் முதலியவைகளுக்கு பரிசரசகந்தத்தையறியும் மூவறிவும். நண்டு, தும்பி முதலியவைகளுக்கு பரிசரசகந்தரூபத்தையறியும் நான்கறிவும், மிருகம், பக்ஷி முதலியவைகளுக்கு சத்த, பரிச, ரூப, ரச, கந்தத்தையறியும், ஐந்தறிவும், தேவர், மனிதர் முதலியவர்களுக்கு மேற்சொல்லிய பஞ்ச அறிவோடு நன்மை தீமைகளைப் பகுத்தறியும் அறிவும் சேர்ந்து ஆறறிவு உளதாம். இவற்றுள் ஓரறிவுள்ள தாவராதிகளை அசர

வஸ்துவென்றும் ஈரறிவுமுதல் ஆறறிவு ஈறாக உள்ளவை யெல்லாம் சரவஸ்துவென்றுஞ் சொல்வதாகும்.

மூவகைச் சாதியாவன:—

உத்தமம், மத்திமம், அதமமென மூன்றும். இவற்றுள் இகலோக பரலோக புத்தி இருவகையும் கொடுக்கின்ற மானிட சரீரம் உத்தமஜாதி. பரலோகபுத்தியை மறைத்து இகலோக புத்தியைமாத்திரங்கொடுக்கின்ற மிருகம், பக்ஷி, ஊர்வன, நீர் வாழ்வனவாகிய யிவைகள் மத்திமஜாதி, இரண்டுலோக புத்தியையும் மறைத்து இருக்கின்ற மரம், செடி, கொடி முதலியவை அதம ஜாதி.

இப்படிப் பிருதிவுதத்துவமாயிருக்கின்ற பூலோகத்திற் கண்டாற்போல அப்பு, அக்கினி, வாயு, ஆகாயமென்று சொல்லப் பட்ட தத்துவங்களாய் நிரைநிரையேயிருக்கின்ற பிதிர்லோகம், தேவலோகம், யக்ஷகந்தர்வலோகங்களிலும் நக்ஷத்திரமாகத் தோற்றுகின்ற பிதுர்க்கள், சந்திரன், சூரியன் முதலான தேவர்கள், யக்ஷர்கள், கந்தர்வர் என்னப்பட்டவர்கள் உத்தம ஜாதி. காமதேனு, அயிராவதம், அன்னம், கருடன் முதலானவை மத்திமஜாதி. கற்பகவிருக்ஷம், பாரிஜாத முதலானவை அதமஜாதி.

மேற்சொல்லிய ஆறு தத்துவங்களையுடைய ஸ்தூலசரீரத்திற்குப் பரம் சூக்ஷ்மசரீரம். சூக்ஷ்மசரீரத்திற்குப் பரம் ஜீவன். ஜீவனுக்குப் பரம் பிரமம் ஆகும்.

இனி ஆவரணசத்தியானது ஜீவர்களுக்கு தம்மையும்

தலைவனையுந்தோன்றவிடாது எதிர்கண்டபொருளை மறைக்குந் திரைச்சீலையைப்போலவும் ஜலத்தைமறைக்கும் பாசியைப்போலவும் சந்திரனைமறைக்கும் மேகம்போலவும் மறைத்து ஜீவர்கள் சரீரத்தையே தானென்றபிமானித்து இதமகிதத்துட்சாரும்படி செய்தது. இதற்குச்சான்றாக சிதம்பரம் முதலிய ஸ்தலங்களிலும் ஜீவர்களாகிய நமக்கும் ஈஸ்வரனாகிய இலிங்க சொரூபத்திற்கும் மத்தியில் திரைபோட்டிருக்கின்றது. மேலும் இந்த ஆவரண சத்தியை திரோதாயி சத்தியென்றுஞ் சத்தூக்கள் சொல்லுவர்.

இப்படி அசுத்தமாயையின் காரணத்தாற் ஜீவர்களுக்குத் தனுகரணபுவனபோகமுண்டாயினதுபோல் சுத்தமாயையின் காரணத்தால் மேற்சொல்லிய பஞ்சகர்த்தா ஐவருக்கும் தனுகரணபுவனபோகமுண்டாயிற்று. இவற்றுள்,

| | | |
|---|---|---|
| தனு | = | உடம்பு |
| கரணம் | = | அந்தக்கரணம் |
| புவனம் | = | அண்டம், புவனம், பாதலமென |

மூவகைத்தாம். இதில் அண்டம் 1008 புவனம் 224 பாதலம் 7 எனவிரியும்.

போகமாவது:— அவரவர், கன்மத்துக்குத்தக்கவாறு உண்பன, தின்பன, கடிப்பன, குடிப்பன, நக்குவன, விழுங்குவன, உடுப்பன, முடிப்பன, பூண்பன, பூசுவன, கொடுப்பன, வாங்குவன, காண்பன, கேட்பன, நடப்பன, படுப்பன, பெண்டுபிள்ளை, சுற்றம், பொன், மணி, சுவர்க்கம், நரகம் முதலியனவாம்.

மேற்சொல்லிய பஞ்சமூர்த்தி ஐவருள் பிர்ம, விஷ்ணு முதல்

கிருமி தாவரம் ஈறாக ஆணவம், கர்மம், மாயை யென்று மூன்று மலமுடையவர்கள். இவர்களுக்குப் பிறப்பு இறப்பு உள்வாம். இதனை,

நூறு கோடி பிரமர்க ணொங்கினார்
ஆறு கோடி நாராயண ரங்கனே
யேறு கங்கை மணலெண் ணிலிந்திரன்
ஈறி லாதவ ஈச னொருவனே எனவரும்

தேவார பாசுரத்தாலறியக்கிடக்கின்றது. உருத்திரன், மஹேஸ்வரன் இருவரும் ஆணவம் கர்மமென இரண்டுமலமுடையவர்கள். இவர்களுக்கு சிருஷ்டிகாலமுதற் சங்காரகாலம்வரைக்கும் பிறப்பு இறப்பு இலவாம். சதாசிவமூர்த்தியோ மலமற்றவர். இதனை,

"நெற்றி விழியுடைய நிர்மல சதாசிவம்" எனப் பட்டினத்தடிகளும் விளக்கியருளினர். இந்தச் சதாசிவமூர்த்தியே திருக்கயிலாயத்தில் உமாதேவிபாகராய்த் திருநந்திதேவர் முதலிய கணாதிபர்கள்சூழ எழுந்தருளியிருந்து ஆன்மாக்களுக்கு இருவினையொப்பு மலபரிபாகம் வந்தகாலத்தில் அருள்புரிவர்.

இப்படிச் சிருஷ்டிகாலத்தில் காரியமான பிரபஞ்சம் சங்காரமாகி அழிவதற்கு எவ்வளவு காலஞ்செல்லுமெனின்,

காலப்பிரமாணம்.

நிமிஷம் பதினைந்துகொண்டது ஒரு காஷ்டை.
காஷ்டை முப்பதுகொண்டது ஒரு கலை.
கலை முப்பதுகொண்டது ஒரு முகூர்த்தம்
முகூர்த்தமென்பது இரண்டு நாழிகை

# பிரபஞ்ச உற்பத்திக் கட்டளை.

முகூர்த்த் முப்பதுகொண்டது பகலும் இரவுங்கூடிய ஒருநாள்
நாள் பதினைந்துகொண்டது ஒரு பக்ஷம்
பக்ஷம் இரண்டுகொண்டது ஒரு மாசம்
மாசம் ஆறுகொண்டது ஒரு அயனம்
அயனம் இரண்டுகொண்டது ஒரு வருஷம்

இம்மனுஷ வருஷமொன்று தேவர்களுக்கு ஒரு நாளாம். தேவர்களுக்கு உத்தராயணம் பகலும், தக்ஷணாயணம் இரவுமாகும். மனுஷ வருஷம் முன்னூற்றறுபதுகொண்டது தேவர்களுக்கு ஒரு வருஷமாம். தேவவருஷம் பன்னிரண்டாயிரங்கொண்டது பூவுலகிற்கு சதுர்யுகமாம்.

| யுகம் | தேவவருஷம் | மனுஷ வருஷம் |
|---|---|---|
| கிரேதா யுகம் | 4800 | 1728000 |
| திரேதா யுகம் | 3600 | 1296000 |
| துவாபர யுகம் | 2400 | 864000 |
| கலி யுகம் | 1200 | 432000 |
| ஆக சதுர்யுகம் 1-க்கு | 12000 | 4320000 |

இப்படிச் சதுர்யுகம் ஆயிரந்திரும்பினால் பிரமாவுக்கு ஒரு பகலாகும், பின்னும் ஆயிரஞ்சதுர்யுகந் திரும்பினால் பிரமாவுக்கு ஓரிரவாகும். இவ்விதம் இரண்டாயிரஞ் சதுர்யுகங்கொண்டது பிரமாவுக்கு ஒரு நாளெனப்படும். இந்த நாள் முப்பது கொண்டது ஒரு மாசம். இந்தமாசம் பன்னிரெண்டு கொண்டது ஒரு வருஷம். இந்த வருஷம் நூறானால் பிரமாவுக்கு ஆயுள்முடியும்.

இப்படி ஆயிரஞ் சதுர்யுகங்கொண்ட பகற்காலத்தில் பிரமா

சிருஷ்டித்தொழில் செய்வர். பின்னும் ஆயிரஞ்சதுர்யுகங் கொண்ட இராக்காலத்தில் நித்திரை செய்வர். இவ்விதம் பிரமா நித்திரை செய்யும்போது பூவுலகத்திற் பிரளய முண்டாம். அதெப்படியெனின் பூவுலகத்திலே வாழ்கின்ற அநேக ஜீவராசிகளுள் மனிதர்வாழ்நாளுக்குள் ஊர்வன வாகிய எறும்பு முதலியவைகளுக்குக் கார்காலத்தில் பிரளய முண்டாவதுபோல பிரமாவினுடைய நித்திரைக்காலத்தில் பூவுலகத்தில் பிரளயமுண்டாகும். அதற்குமேல் பிரமாவுக்கு நித்திரைக்காலம் நீங்கிப் பகற்காலமுண்டாய் மறுபடியும் சிருஷ்டித்தொழில் செய்வர். இவ்விதமாகப் பிரமாவினுடைய ஒருபகலிலே பதினன்கு இந்திரர்கள் இறப்பர். ஒரு மாசத்திலே நானூற்றிருபது இந்திரர்கள் இறப்பர். ஒரு வருஷத்திலே ஐயாயிரத்து நாற்பது இந்திரர்கள் இறப்பர். ஒரு பிரமாவினுடைய ஆயிசுக்குள்ளே ஐந்துலக்ஷத்துநாற்பதிணுயிரம் இந்திரர்கள் இறப்பார்கள். இவ்வியல்புடைய பிரமாக்கள் கோடி பேர்கள் அழியின் தாமரைக் கண்ணனாகிய விஷ்ணு வடவால விருக்ஷத்தில் நித்திரை செய்வர். இத்தகைய விஷ்ணுக்கள் கோடி பேர்கள் அழியின் அருணகிரிநாதராகிய நெற்றிக்கண்ணர் சிறிது புன்னகை செய்வர். இதனை,

கோடிவிதி மாளிற் குலவுகமலக்கண்ண
னேடிவட வாலி லுறங்குமே—நாடுங்கால்
அக்கண்ணர் கோடி யழிந்தா லருணகிரி
நக்கண்ணர் சற்றே நகும்

என்னும் அருணகிரியந்தாதியாற் காண்க.

பகல் ... மாசம் ஆறு கொண்டது ... அயனம் இரண்டுகொண்டது ஒரு வருஷம்.

இம்மனுஷ வருஷமொன்று தேவர்களுக்கு ஒரு நாளாம். தேவர்களுக்கு உத்தராயணம் பகலும், தக்ஷிணாயனம் இரவுமாகும். மனுஷ வருஷம் முன்னூற்றறுபதுகொண்டது தேவர்களுக்கு ஒரு வருஷமாம். தேவவருஷம் பன்னிரண்டாயிரங்கொண்டது பூவுலகிற்கு சதுர்யுகமாம்.

| யுகம் | தேவவருஷம் | மனுஷ வருஷம் |
|---|---|---|
| கிரேதா யுகம் | 4800 | 1728000 |
| திரேதா யுகம் | 3600 | 1296000 |
| துவாபர யுகம் | 2400 | 864000 |
| கலி யுகம் | 1200 | 432000 |
| ஆக சதுர்யுகம் 1-க்கு | 12000 | 4320000 |

இப்படிச் சதுர்யுகம் ஆயிரந்திரும்பினால் பிரமாவுக்கு ஒரு பகலாகும், பின்னும் ஆயிரஞ்சதுர்யுகந் திரும்பினால் பிரமாவுக்கு ஓரிரவாகும். இவ்விதம் இரண்டாயிரஞ் சதுர்யுகங்கொண்டது பிரமாவுக்கு ஒரு நாளெனப்படும். இந்த நாள் முப்பது கொண்டது ஒரு மாசம். இந்தமாசம் பன்னிரெண்டு கொண்டது ஒரு வருஷம். இந்த வருஷம் நூறானால் பிரமாவுக்கு ஆயுள்முடியும். இப்படி ஆயிரஞ் சதுர்யுகங்கொண்ட பகற்காலத்தில் பிரமா

## பிரபஞ்ச உற்பத்திக் கட்டளை.

சிவபெருமான் சிறிது புன்னகை செய்வதற்குள் கோடிபேர் விஷ்ணுவும் பலகோடி பிரமாவும் எண்ணிறந்தகோடி இந்திரனும் அழிந்திடுவரென்னின் ஈசுர வருஷத்தை எவ்விதம் கணக்கிட முடியும். இதனை அளவிட்டறியொணாததுபற்றியே மாணிக்க வாசக சுவாமிகளும்

எண்ணுடை மூவரி ராக்கதர்க ளெரிபிழைத்துக்
கண்ணுத லெந்தை கடைத்தலைமு னின்ற தற்பி
னெண்ணிலி யிந்திர ரெத்தனையோ பிரமர்களும்
மண்மிசை மால்பலர் மாண்டனர் காண் டோணோக்கம்

முந்திய முதனடு விறுதியு மானாய்
மூவரு மறிகில ரியாவர்மற் றறிவார்

அளவறுப்பதற் கரியவ னிமயவர்க்கு எனச் சிவபெருமானது பெருமையை வியந்து பாராட்டினராதலால்,

சர்வ சிருஷ்டிகாலத்திற்கும் சர்வ சங்காரகாலத்திற்கும் மத்தியிலுள்ள காலங்களை அளவிடமுடியாது. ஆனதாலதுவரைக்கும் ஜீவர்களை, மேற்சொல்லியநால்வகைப்பிறப்பு எழுவகைத் தோற்றம், எண்பத்துநான்குலக்ஷம் யோனிபேதங்களிலும் சகடக்கால் உருளுவதுபோல கர்மத்திற்குத் தக்கவாறு மாறி மாறி பிர்மா சிருஷ்டிக்கவும், விஷ்ணு ரக்ஷிக்கவும், மஹேஸ்வரரின் மாயா சக்தியால் மயக்கமடைந்து, "நில்லாமைக்கே யழுதுநின்ற நாட்போதாதோ" என்பதற்கிலக்காய் அநித்ய போகங்களில் ஆசைப்பட்டு உழன்று ஆயுள்முடிவில் உருத்திரமூர்த்தியால் ஸ்தூலசரீரம், சங்காரமாகி விழவும் ஜீவர்கள் சூக்ஷ்மசரீரத்தோடு கூடியிருத்தற் கேதுவாகிய தேவசரீரம், கன்மசரீரம்

என்னும் யாதனாசரீரத்தைப் பெறுவர். ஆகவே மூன்றுலகங்களுக்கும் மூவகைச்சரீர மெடுப்பர் என்பதை பட்டினத்தடிகள்,

பூதசாரத்தனு பூதமாகதனு
பூத பரி ணமம் புகலுறுயாக்கை
மூவகைப் பண்டியின் மேவரவியற்றிப்
பொன்னிலம் நிரயம் இன்னிலமென்னும்
இடந்தோறுமாங்கவை யடங்கவைத்து

என அருளியிருக்கின்றனர். மேற்சொல்லிய யாதனாசரீரம்பெற்ற ஜீவர்களை எமதூதவர்கள் கொண்டுபோய் எமதர்மாவிடத்தில் விடுவர். எமதர்மாவும் அவர்களின் பாப புண்ணியங்களைச் சித்திர புத்திரரால் தெரிந்து அவைகளுக்குத் தக்கவாறு சுவர்க்க நரகங்களை அனுபவிக்கச்செய்து பின்னும் மறு ஜனனத்திற்கு வித்தாக எஞ்சிநின்ற புண்ணிய பாவங்களாகிய சஞ்சிதமூட்டையைச் சீவர்களுக்குச் சுமத்திப் பிர்மாவிடத்திற்கு அனுப்பி வைப்பர். பிர்மா அவர்களை மறுபடியும் அவரவர் கர்மத்திற்குத் தக்கவாறு சிருஷ்டிப்பர். அஃதெப்படியெனின் எந்தக்கர்ப்பத்தில் உற்பத்தியாகத்தக்க கர்மமுளதோ அதற்குறிய தாய்தந்தையர்களைப் புணரச்செய்து அவர்களது சுக்கில சுரோணிதத்தில் அறுகு நுனியின் பனித்துளியளவு கெர்ப்பப்பையிற்செல்ல அதில் தெய்வீகத் தன்மையால் ஆன்மா புகும்.

இதனை அருணகிரியாரும்

அறுகுநுனி பனியனைய சிறியதுளி பெருகியொரு

ஆகமாகியோர் பாலரூபமாய் எனத் திருவாய் மலர்ந்தருளினர். இப்படி மாறி மாறிப் பிறப்பதுபற்றியே, மாணிக்கவாசக

சுவாமிகளும்,

புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகி
பல் மிருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகி
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்ல சுரராகி முனிவராய்த் தேவராய்
செல்லா நின்ற இத்தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தே னெம்பெருமான்

எனவும்

"புல்லாகிப் பூடாய்ப் புலர்ந்தநாட் போதாதோ
கல்லாய் மரமாய்க் கழிந்தநாட் போதாதோ
கிரியாய்க் கீடமாய்க் கெட்டநாட் போதாதோ
நீரியா யூர்வனவாய் நின்றநாட் போதாதோ
பூதமொடு தேவருமாய்ப் போனநாட் போதாதோ
வேதனைசெய் தானவராய் வீழ்ந்தநாட் போதாதோ
அன்னைவயிற்றி லழிந்தநாட் போதாதோ
மன்னவனாய் வாழ்ந்து மரித்தநாட் போதாதோ
தாயாகித் தாரமாய்த் தாழ்ந்தநாட் போதாதோ
சேயாய்ப் புருடனுமாய்ச் சென்றநாட் போதாதோ
நோயுண்ண வேமெலிந்து நொந்தநாட் போதாதோ
பேயுண்ணப் பேயாய்ப் பிறந்தநாட் போதாதோ
ஊனஉடற் கூன்குருடா யுற்றநாட் போதாதோ
ஈனப் புசிப்பி லிளைத்தநாட் போதாதோ
பட்டலையும் பரதவிப்பும் போதாதோ
கெட்டநாட் கெட்டே னென்றுகேளாதும் போதாதோ

நில்லாமைக் கேயழுது நின்றநாட் போதாதோ
எல்லாரு மென்பார மெடுத்தநாட் போதாதோ
காமன் கணையாற் கடைபட்டல் போதாதோ
எமன் கரத்தா லிடியுண்டல் போதாதோ
நான்முகன் பட்டோலை நறுக்கொண்டல் போதாதோ
தேன்றுளபத் தானேமி தேக்குண்டல் போதாதோ
உருத்திரனார் சங்காரத் துற்றநாட் போதாதோ"

எனவும்

ஒழியாப் பிறவி யெடுத்தேங்கி யேங்கி யுழன்ற நெஞ்சே
அழியாப் பதவிக் கவுடதங் கேட்டி யனாதி யனை
மழுமான் கரத்தனை மால்விடை யானை மனத்தி லுன்னி
விழியாற் புனல்சிந்தி விம்மியழு நன்மை வேண்டு மென்றே

எனப் பட்டினத்தடிகளும் உண்மைப் பக்தியின் உறுதியை யுரைத்தனர்.

இவ்வாறு பிறவிப்பிணிக்கஞ்சி அழுதழுது நமது முன்னோர்கள் திருவருளிற்றிளைத்தனர். ஆகையால் நாமும் அவ்வழியையே கடைப்பிடித்து ஒழுகின் திருவருளை எய்தலாமென்பது திண்ணம். இதற்குச்சான்றாக மாணிக்கவாசக சுவாமிகளும்,

யானேபோய் என்னெஞ்சம்போய் என்னன்பும்போய்
ஆனால் வினையே னழுதாலுன்னைப் பெறலாமே

எனவும்,

அன்பாற் கரைந்து கண்ணீ ராறுகண்ட புண்ணியருக்
குன்பால் வரவழிதா னுண்டோ பராபரமே.
கண்ணுறு கரைபுரள நின்றவன் பரையெலாங்
கைவிடாக் காக்ஷியுறவே.

எனத் தாயுமானசுவாமிகளும் அன்பின் நெகிழ்ச்சியை யறிவித்தனர். ஆனதால் ஒருவன் எவ்விதப் பழக்கத்தையுஞ் சாத்தியமாய்ப் பழகிவிடலாம். ஆனால் கண்ணீர்வருவது சாத்தியமன்று. இது பற்றியே,

"...............................பேரானந்தம்
உற்றவர்க்கே கண்ணீர் கம்பலையுண்டாகும்,
உறுதவரே கன்னெஞ்ச முடையோராவர்.

எனத் தாயுமானசுவாமிகளும் கூறினர்.

இனி, சிருஷ்டிகாலத்தில் காரியமான பிரபஞ்சம் சங்காரகாலத்தில் ஒடுங்குமுறை யெங்ஙனமெனின் சகல ஜீவர்களிடத்துமிருக்கின்ற ஸ்தூலசரீரங்கள் அனைத்தும் தமக்காதாரமாகிய ஸ்தூலபூதங்களிலேயே மடிந்து பூதமாத்திரமாக ஒடுங்கும். ஸ்தூலபூதங்களும் பஞ்சீகரணம்விட்டு தன்மாத்திரைகளான தமோகுணபூதங்களாக மிஞ்சும். சூக்ஷ்மசரீர தத்துவங்கள் இருபதும், சத்துவகுணமும் ரஜோ குணமுமாக ஒடுங்கும். அது

எங்ஙனமெனின் சகல ஜீவர்களிடத்து மிருக்கின்ற சூக்ஷம சரீரதத்துவங்களில் அகங்காரமும் க்ராணேந்திரியமும் உதான வாயுவும் உபஸ்த இந்திரியமும் பிருதிவியில் ஒடுங்கும். சித்தமும் சிங்குவையும், சமானவாயுவும் பாயுருவும் அப்புவில் ஒடுங்கும். புத்தியும் சட்சுவும் அபானனும் பாதமும் அக்கினியில் ஒடுங்கும். மனதும் தொக்கும் பிராணனும் பாணியும் வாயுவில் ஒடுங்கும். உள்ளமும் சுரோத்திரேந்திரியமும் வியானனும் வாக்கும் ஆகாயத்தில் ஒடுங்கும். அப்போது முக்குணபூதங்களாகும். இந்த சூக்ஷமபூதங்களும் பிருதிவி அப்புவிற்கரைந்து ஒடுங்கும். அப்புவும் அக்கினியிற் சுவறி ஒடுங்கும். அக்கினியும் வாயுவில் அணைந்தொடுங்கும். வாயுவும் ஆகாயத்தில் ஓய்ந்தொடுங்கும். ஆகாயமும் விக்ஷேபசத்தியில் ஒடுங்கும். விக்ஷேபசத்தியும், ஆவரணசத்தியும் தமோகுணத்தில் ஒடுங்கும். முக்குணங்களும் ஜீவர்களும் மூலப்பிரகிருதியில் ஒடுங்குவர்கள். மூலப்பிரகிருதியும் பிர்மாவும் விஷ்ணுவின் உந்திக்கமலத்தில் ஒடுங்கும். விஷ்ணுவும் உருத்திரனில் ஒடுங்கும். உருத்திரனும் மஹேஸ்வரரில் ஒடுங்கும். மஹேஸ்வரர் சதாசிவத்தில் ஒடுங்கும். சதாசிவம் விந்துவில் ஒடுங்கும். விந்து நாதத்தில் ஒடுங்கும். நாதம் சத்தியில் ஒடுங்கும். சத்தியும் பிர்மத்தில் ஒடுங்கும். பிர்மம் எங்கும் தாமாய்ப் பரிபூரணமாகும். இதனைத் தாயுமானவர்,

விரிவாய பூதங்களொன்றேடொன் ருயழியும்
மேற்கொண்ட சேடமதுவே வெறுவெளி

எனத் திருவாய் மலர்ந்தருளினர்.

பிரபஞ்ச உற்பத்திக் கட்டளை
முற்றிற்று.

---

உ

பரப்பிரம்மணே நம:

# உலகியற் கட்டளை.

---

ஆன்மாக்கட்கு ஆணவமலமாகிய மூலமலத்தின் ஏதுவால் கன்மானுசாரமாக எய்தும் பிறவிகள் நால்வகை பிறப்பில் எழுவகைத்தோற்றமாய் 84 லக்ஷ யோனிபேதங்களாய் விரியும். இவ்விரிவாகிய பிறவிகளுள் ஏனைய பிறவிகளை ஒழித்து மனிதப்பிறவியில் வந்துபிறப்பது பெரிய கடலைக் கரங்களைக்கொண்டு நீந்திக் கரையேறினாற் போலும். மக்களாய்ப் பிறத்தலினும் வைதிக நூல் வழங்கும் நாட்டிற் பிறத்தல் அருமையன்றோ. அதினும் அனாசாரமுடைய குலத்திற் பிறவாமல் ஆசாரமுடைய குலத்திற் பிறத்தலும் அதைவிட பிறசமயங்களிற்போய்ப் பிறவாமல் சைவ சமயத்திற் பிறக்கும் பாக்கியம் பெறுதல் பெரும் பாக்கிய மாகும்.

இவற்றை :—

"அண்டசஞ் சுவேத சங்க ளுற்பிசஞ் சராயு சத்தோ
டெண்டரு நாலெண் பத்து நான்குநூ றாயிரத்தா
யுண்டுபல் யோனி யெல்லா மொழித்துமா னிடத்து தித்தல்
கண்டிடிற் கடலைக் கையா னீந்தினன் காரியங்காண்"

நரர்பயி றேயந் தன்னி ஞன்மறை பயிலா நாட்டில்
விரவுத லொழிந்து தோன்றன் மிக்கபுண் ணியந்தா னுகுந்
தரையினிற் கீழை விட்டுத் தவஞ்செய்சா தியினில் வந்து
பாசம யங்கள் செல்லாப் பாக்கியம் பண்ணு ணுதே

என்றும் சிவஞான சித்தித் திருவிருத்தங்களால் அறிக.

இத்தகைய மேன்மையுற்ற மக்கட்பிறவியை எடுத்ததன் பயன் யாதெனின் ஜெனன மரணத்தை நீக்குவதற்கு ஏதுவாகிய பாரமார்த்திக நெறியை அடைந்து அரன்றிருவடிக்காளாவதாகும். அவ்வாறு ஆகாது வர்ணச்சிரம வைதிகத்திற் புகுந்து சாதியபிமானத்தால் சங்கையுற்று உழல்வதால் பயன் என்னே? அந்தோ! அறியாமை.

மாந்தர்காள்! ஏனைய பிறவிகளில் பேதந்தோன்றுவது போல மானிடங்களாய் உற்பவித்தவர்கட்கு நாள், அவயவம், உருவம், நிறம், அறிவு, இன்பம் முதலியவைகளில் பேதமுண்டாவதல்லவே? ஆனதால் பரமேஸ்வரனிடத்தில் பக்தியுடையவர் எக்குலத்துற்றவராயினும் அவரே உத்தமரும், உயர்குலத்தினருமாவர் என்பதை உணராது தாம் உயர்குலத்துற்றவரென்னும் அபிமானத்தால் பெரியோர்களைக் கண்டால் மரியாதைசெய்யாது இழிகுலத்தாரென அவமதிப்பதனுல் பயன் யாதுளது.

இவ்விதம் பயனில் செயல்புரிந்து பாவத்திற்காளாவதன்றி வேறுகதியுண்டோ. இதற்குச் சான்ருக முன்னோர்காலத்தில் திருவாரூரில் கபிலரை எடுத்துவளர்த்த அந்தணர், குழந்தைக்கு ஏழுவயது சென்றவுடன் முறைப்படி உபநயனம் செய்வதற்கு

6466



உறவினரை அழைக்க அவர்கள் அந்தக்குழந்தை எக்குலத்திற் பிறந்ததோ அறியேம். ஆனதால் அதற்கு உபநயனம் பண்ணல் அடாதென மறுத்தனர். அதனால் வேதியர் மனம் வருந்துவது கண்ட கபிலர் அம்மறையவர் கூட்டத்துட்சென்று சாதியென்பது கன்மத்தாலன்றிச் சென்மத்தால் இல்லையெனச் சித்தாந்தமாவதற்கு "நான்முகன் படைத்த நானிலவகையுலகில்" என்ற அகவலை எடுத்து, அதன் மத்தியில்

முற்படைப் பதனில்வே றாகிய முறைமைபோல்
நால்வகைச் சாதியி னாட்டினில் நாட்டினீர்
மேல்வகை கீழ்வகை விளங்குவ தொழுக்கால்
பெற்றமும் எருமையும் பிறப்பினில் வேறே
அவ்விரு சாதியி லாண்பெண் மாறிக்
கலந்து கருப்பெறல் கண்டது வுண்டோ
ஒருவகைச் சாதியா மக்கட் பிறப்பிலீ
ரிருவகை யாகநீ ரியம்பிய குலத்துள்
ஆண்பெண் மாறி யணைதலு மணைந்தபின்
கருப்பொறை யுயிர்ப்பது காண்கின்றி லீரோ
எந்நிலத் தெந்தவித் திடப்படு கின்றதோ
அந்நிலத் தந்தவித் தங்குதித் திடுமால்
மாறி வேறாகும் வழக்கமொன் றிலையே
பூசுரர் புணர்ந்து புலைச்சிய ரீன்ற
புத்திர ராயினோர் பூசுர ரல்லரோ
பெற்றமும் எருமையும் பேதமாய்த் தோன்றல்போல்
மாந்தரிற் பேதமாம் வடிவெவர் கண்டுளார்

வாழ்நா ளுறுப்புமெய் வண்ணமோ டறிவினில்
வேற்றுமை யாவதும் வெளிப்பட லின்றே
தென்றிசைப் புலையன் வடதிசைக் கேகிற்
பழுதற வோதிப் பார்ப்பன னவன்
வடதிசைப் பார்ப்பான் தென்றிசைக் கேகின்
நடையது கோணிப் புலைய னவன்

அது நிற்க

சேற்றிற் பிறந்த செங்கழு நீர்போல்

பிரமற்குக்

கூத்திவயிற்றிற் பிறந்த வசிட்டரும்
வசிட் டர்க்குச் சண்டாளி
வயிற்றிற் பிறந்த சத்தியரும்
சத்தியர்க்குப் புலைச்சி தோள்
சேர்ந்து பிறந்த பாராசரும்
பாராசருக்கு மீன் வாணிபச்சி
வயிற்றிற் பிறந்த வியாசரும்

ஆகிய இன்னல்வரும்

வேதங் களோதி மேன்மைப் பட்டு
மாதவ ராகி வயங்கின ரன்றே

ஆதலின்

முன்னோ ருரைத்த மொழி தவறமல்
எந்நா ளாயினு மிரப்பவர்க் கிட்டுப்
புலையுங் கொலையுங் களவுந் தவிர்ந்து

நிலைபெற வறத்தி னிற்பதை யறிந்து
ஆணும் பெண்ணு மல்லதை யுணர்ந்து
பேணி யுரைப்பது பிழையெனப் படாது
சிறப்புஞ் சீலமு மல்லது
பிறப்பு நலந்தருமோ பேதை யீரே"

என விளக்கியருளினர். இது பற்றியே,

"ஆதி கபிலர்சொன்ன வாகமத்தின் சொற்படியே
சாதிவரையின்றிநான் சஞ்சரிப்ப தெக்காலம்"

எனப் பத்திரகிரியாருங் கூறினர். ஆதலின் ஆயுதங்களால் உயிரை வதைசெய்து அருந்தி மிருகங்கள்போல நல்லொழுக்கமும் அறிவும்இன்றி வெட்கமும் இலராய் யாவரும் பழித்தற் கேதுவாகிய கடைப்பிறப்புற்றவராயினும் ஏகாம்பரநாதனிடத்து அன்புடையராயின் அவர் யாவர்க்கும் மேலாகிய உத்தமராவர். அவரது சொரூபம் பரமேஸ்வரனது அருட்டிருமேனியேயாகுமன்றி நம் போன்ற மனிதவடிவமின்றாம். இதற்குத் திருநாளைப் போவாரென்னும் திருத்தொண்டரது திவ்விய சரிதமே போதுமான சான்றென்பது போந்த பொருளாகும். இவ்வுண்மையை,

படையா லுயிர்கொன்று தின்று பசுக்களைப்போல செல்லு
நடையா லறிவின்றி நாண்சிறி தின்றி நகுங் குலத்திற்
கடையாய்ப் பிறக்கினுங் கச்சியு ளேகம்பத் தெங்களை யா
ளுடையா னவற்கன்ப ரேலவர் யாவர்க்கு முத்த மரே

எனப் பட்டினத்தடிகளும்

"நிற்கு நன்னிலை நிற்கப் பெற் றாரருள்
வற்க மன்றி மனிதரன் றேயையா"

எனத் தாயுமானவரும் தெளிவுறுத்தினமை காண்க.

இனி சீவர்கள் மூலப் பிரகிருதியாலுற்பவித்த ராஜஸ, தமஸ எனும் தூர்க்குணங்களின்வயப்பட்டு நிகழ்த்தும் பாதகம் ஐந்தாகும். அதாவது பொய், கொலை, களவு, கள், காமம் என்பனவாம். இவற்றுள் முதலாவது பொய்.

பொய்: நியாயஸ்தலத்திலாவது மற்ற இடங்களிலாவது தன்னலங்கருதி பிறர்க்கு விரோதமாக உண்மையல்லாதவற்றை தான்கண்டதாகவும் கேட்டதாகவும் செய்ததாகவும் மெய்ப்பிப்பதே பொய்யெனப்படும். இப்படி மெய்ப்பிப்பதனால் பிறர் கொண்ட நியாயத்தையும்பொருளையும் இழந்து மனம்வருந்துவர். இப்படிப்பிறரை மனம் வருந்தச்செய்யும் பொய்யினால்வரும் தீமை எத்தகையதெனின் நூறு பசுவைக்கொன்றவன் ஒரு வேதியனைக் கொன்ற தோஷத்தையும், நூறு வேதியனைக் கொன்றவன் ஒரு மாதரைக் கொன்ற தோஷத்தையும், நூறு மாதரைக் கொன்றவன் ஒரு சிசுவைக் கொன்ற தோஷத்தையும், நூறு சிசுவைக் கொன்றவன் ஒரு பொய்சொன்ன தோஷத்தையும் அடைவன். இதனை.

கோவதைகள் நூறுகொலை செய்யிலொரு வேதன்
வேதியனை நூறுகொலை செய்யிலொரு மாதர்
மாதர்களை நூறுகொலை செய்யிலொரு பாலர்
பாலர்களை நூறுகொலை செய்யிலொரு பொய்யன்

என்னுமிதனால் அறியக்கிடக்கின்றது.

இத்தகைய பெரும் பாதகத்தை விளைவிக்கும் பொய்யை நிலைபெறவைத்துக்கொண்டு செய்யும் தானம் தவம் முதலியவை

யாவும் ஆற்றிற்கரைத்த புளியாகுமன்றே! ஆதலின் இம்மையிற் புகழும், மறுமையில் மோக்ஷமும் அடைய விரும்புவோர் அசத்தியத்தை அறவே ஒழிப்பது அவசியமாகும். அவ்வாறு ஒழித்துவிடின் அதைவிட உயரிய பேறு யாதுளது. இதற்குப் பொய்யாமொழிவேந்தர் சரிதமாகிய அரிச்சந்திரப் புராணமே தக்க சான்றாகும். இது கருதியே தெய்வப் புலவரும்

"பொய்யாமை யன்ன புகழில்லை
எய்யாமை எல்லாவாமுந்தரும்"

எனக் கூறினர்.

கொலை: கொலையாவது உயிர்களை அவைகளுக்கு இடமாகிய உடம்பினின்றும் பிரியச்செய்வதாகும். இவை சராசர வஸ்துக்கெல்லாம் பொதுவாயிருக்கினும் சங்கரிக்கும் போழ்து சரவஸ்துக்கள் நிகழ்த்துவதாகிய துள்ளல், துடித்தல், கத்தல் ஆகியதன்மை அசரவஸ்துவுக்கின்றாம். ஏனெனின் அவைகள் ஓரறிவுடையனவாதலால் விசேட அறிவுளதாகிய சரவஸ்துக்கள் அறிவதை அசரவஸ்துக்கள் அறியாவாம். எனினும் கொல்லும் போது அவைகளின் சிற்றறிவிற்குத்தக்கவாறு சிறிது இம்சை அடைவதால் அவைகளைக்கொல்வதினாலும் சிறிதுபாவமுண்டாம். இச்சிறியபாவங்களையுடைய அசரபதார்த்தங்களை நம் உணவு முதலியவற்றிற்காக கொலைசெய்வதனால் அப்பாவத்தை நீக்கும்பொருட்டு நித்ய கன்மானுட்டானஞ்செய்து நாம் அன்ன பானாதிகள் அருந்தும் போழ்து முதல்முதல் கடவுள், குரு, அதிதிகள், அக்கினி என்னும் நால்வகையோருக்கும் முன்னூட்டிப் பின்னுண்பானாயின் அவ்வசரக் கொலையால்வரும்

பாவமும், உழுதல், அலகிடல், மெழுகுதல், நெருப்பு மூட்டல், தண்ணீர் கவர்தல், நெற்குத்துதல் முதலிய தொழில்களால் வரும் பாவமும் அவ்வக்காலத்திலே நீங்கிவிடுமென்பது வேதநூன் முறையாகும். ஆனால் எத்தகையப் பாவங்களைச் செய்யினும் சிவார்ப்பண முதலியன செய்துவிடின் அப்பாவங்கள் நீங்கிவிடு மன்றோவெனின் நீங்காது. ஏனெனின் உலகத்தில் குடிகள் செய்யும் குற்றத்தை அரசன் பகுத்தறிந்து அவற்றுள் சிறிய குற்றமுடையாரை மன்னிப்பதும் பெரிய குற்றமுடையாரைத் தண்டிப்பதும் இயல்பாகுமன்றோ. அவைபோல் சர்வலோக நாயகனான பரமேஸ்வரனும் ஆன்மாக்கள் சாஸ்திர விகிதப்படி செய்யும் சத்கிர்த்தியங்களில் அறிந்தும் அறியாமலும் வருவதாகிய சிறிய குற்றங்களை மன்னிப்பதும் சாஸ்திர அகிதப்படி செய்யும் பெரிய குற்றங்களுக்காக அவர்களைத் தண்டிப்பதும் இயல்பாகும்.

இத்தகைய சாஸ்திர விகிதத்தை அறியாது பெரும் பான்மையோர் தமது உடம்பை வளர்த்தற்பொருட்டு பிறவுயிர்களாகிய சரவஸ்துக்களைக்கொன்றருந்துகின்றார்களே இவர்களது மடமைதானென்னே. அந்தோ! அங்ஙனம் சரவஸ்துக்களைக் கொல்லும்போழ்து அவைகள் அனுபவிக்கும் துன்பத்தை அளவிடற்கோர் எல்லையுமுளதோ. அந்தோ! உன்னிற் பரிதாபம். இவ்விதக் கொடுஞ்செயல்களை பிறர் செய்யுந்தருணம் இளகியமனமுடையார் காண்பதற்கும் அஞ்சுவரெனின் அத்தகைய கொடுஞ்செயலை அவர் செய்யாரென்பதற்கு ஐயமும் உளதோ. இதனைத் தாயுமானப்பெருந்தகையும்.

"........................வேறொன்றை யொருவர் கொல்லின்
அன்னோரமையோ வென்முகம் வாடிநிற்பதுவு மையநின்
னருளறியுமே".

"இரங்குவார் கொலைகள் பயிலார்" எனக்கூறிய இவைகளே நன்குணர்த்துகின்றன.

இப்படிக்காண்போரும், கேட்போரும், நினைப்போரும் அச்சமுறும் கொலைத்தொழிலை அஞ்சாதுபுரிந்து உடல் வளர்க்கும் இறுமாப்புடைய புன்மாக்களை மறலி கைப்பற்றிக்கொண்டு போய்க் கொடிய தண்டஞ்செய்து மேலும் இரும்பையுருக்கி அவர்கள் வாயில் வார்த்து தீவாய் நரகம் என்னும் எழுநரகினும் வீழ்த்தி ஓவுறுத்துன்பஞ்செய்வரே. அக்காலத்தில் இவர்கள் என் செய்வரோ அறியேம். இதுபற்றியே பட்டினத்தடிகளும்,

"சடக்கடத் துக்கிரை தேடிப் பலவுயிர் தன்னைக் கொன்று
விடக்கடித் துக்கொண் டிறுமாந் திருந்து மிக மெலிந்தே
படக்கடித் தின்றுழல் வார்கட மைக்கரம் பற்றி நம
னிடக்கடிக் கும்பொழு தேதுசெய் வார்கச்சி யேகம் பனே"

எனவும்.

**சிவஞானதீபம் :**

"எவ்வுயிரும் பராபரன்சந் நிதிய தாகும்
இலங்குமுயி ருடலனைத்து மீசன் கோயில்
எவ்வுயிரு மெம்முயிர்போ லென்று நோக்கி
யிரங்காது கொன்றருந்து மிழிவி னோரை

வவ்வியமன் றூதாருந் தண்டஞ் செய்து
வல்லிரும்பை யுருக்கியவர் வாயில் வார்த்து
வெவ்வியதீ யெழுநரகில் வீழ்த்தி மாறு
வேதனைசெய் திடுவரென வோது நூலே"

எனவும் கூறுகின்றது.

இத்தகைய துன்பத்தைத் தருவதாகிய சீவ இம்சையைச் செய்து அருந்துவதை ஒழித்து அகிம்சையைக் கைப்பற்றுவோமாயின் நம்மை எல்லாவுயிரும் வணங்குமன்றோ. இதற்குச் சான்றாக முன் ஒருகாலத்தில் மழையின்மையால் குளங்களெல்லாம் வறண்டுபோய் நீர்வாழ்வனவாகிய மச்சம் முதலானவை அற்றொழிந்ததனால் இரையின்றி வாடிய செங்கால்நாரை கூடற்பதியை அடைந்து மீனாக்ஷிசுந்தரேசனின் சன்னிதியின்கண் உள்ளதாகிய பொற்றாமரை வாவியின் கரையில் வைகி ஆங்குள்ள மச்சங்களைக் கவர்ந்துண்ண நோக்கிற்று. அத்தகைய வஞ்சக மனமுடைத்தாகிய நாரையின் கொலைத்தொழிலை உணர்ந்து நீர்வாழ்வனவாகிய மச்ச முதலியனவும் அதன் கண்ணுக்குத் தோன்றாதொழிந்தன. அதனால் நாரைக்கு இரையின்றி வாட்ட முறுங்கால் அதன் பக்கத்தில் உறுவதாகிய சந்தியாமண்டபத்தில் வசித்துவரும் சில முதியோர்கள் ஆங்கெழுந்தருளும் சொக்கலிங்கமாகிய மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் மூன்றின் பெருமையை வியந்துரைத்துப் பிறவியை நீக்குதற்கு இத்தலத்துறைவதும் கனக கஞ்சத்தடமாகிய இதில் ஸ்நானஞ்செய்வதும் இங்கிதற்கு அரும்பாவந்தீர்த்த லிங்கப்பெருமானைத் தெரிசனம் பண்ணுவதுமே தக்கதாம் எனவுரைக்கக் கேள்வியுற்ற நாரைக்

குப் பாவவிமோசன முண்டாய்ப் பகுத்தறிவு தோன்றிற்று. அத்தருணம் சில தபோதனர் அத்தடாகத்தில் ஸ்நானஞ் செய்தனர். அப்படி ஸ்நானஞ் செய்தவர் எழும்போது அவரது தோளிலும், சடையிலும், முடியிலுமாகத் துள்ளித்துள்ளி அளவளாவி விளையாடிய மச்சங்களைக் கண்ணுற்ற நாரையானது, ஆகா! ஈதென்ன ஆச்சரியம் நம் கண்ணுக்குப் புலப்படாதொழிந்த இம் மச்சங்கள் இம்முனிவர்களது தோளிலும், முடியிலுமாகத் தத்தி விளையாடுவது இவரது கொல்லாமைக்கருதியன்றோவென அறிந்து இவ்வருந்தவ சிரேஷ்டர்களின் திருமேனி தீண்டப்பெற்ற இம் மச்சங்களை வதை செய்தருந்தாதுடன் தம்முயிர் நீப்பினும் எவ்வுயிரையும் வதைசெய்தருந்துவதில்லை என்னும் வைராக்கியத்தாலன்றோ பகுத்தறிவில்லாத பக்ஷிக்கும் மூவைந்து நாளில் இறைவன் எழுந்தருளினர். இதனை,

அந்த வாவியின் போதோ தீர்த்தமென்
றிந்த ஞால மியம்புவ தாலிரை
யுந்த வாவு கொடுக்க வெழுந்தமுன்
வந்த நாரை யதன்கரை வைகுமால்

ஆய்ந்த மாதவ ரப்புனி தத்தடந்
தோய்ந்து தோய்ந்தங் கெழுந்தொறுந் தோட்புறஞ்
சாய்ந்த வார்சடைக் கற்றையிற் றத்துமீன்
பாய்ந்து பாய்ந்து புரள்வன பார்த்தரோ

ஈண்டை யித்தவத் தோர்திரு மேனியைத்
தீண்ட வெத்தவஞ் செய்தன வேகொலென்

ருண்டை மீனமக் காகா வெனவிரை
வேண்டு நாரை வெறுத்தங் கிருந்ததால்

### வேறு

இந்நிலை நியம மூவைந் தெல்லைஞான் றியன்று பின்னு
ளாந்நிலை யொழுகு நாரை யாடகக் கமலந் தோய்வான்
வந்நிலை மதில்சூழ் ஞாங்கர் வந்துழிப் பசியால் வெந்து
மின்னிலை வேல்போற் றுள்ளு மீன்கவர்ந் துண்கு மென்னு

சிறிதுளத் துள்கி நாதன் றிருவருள் வலத்தாற் பின்ன
ரறிவுவந் தச்சோ விந்த வறப்பெருந் தீர்த்தத் துள்ளே
யெறியுமீ னருந்த வாசை யெழுந்ததே யெனக்கிப் போதிப்
பிறவியென் றொழிவ தென்னுப் போரு ரடைந்து பின்னும்

சுந்தரச் செம்மல் பாதத் துணைமல ரன்பிற் றேய்ந்து
சிந்தைவைத் திருக்கு மெல்லை தேவரு மறையுஞ் செய்யும்
வந்தனைக் கரியா ரைை மனநினை வடிவாய்த் தோன்றி
யெந்தமக்கினியாய்வேண்டும் வரமென்கொ லியம்புகென்றார்

### கலி விருத்தம்.

"செய்ய கான்மட நாரையுஞ் சென்றுதாழ்ந்
தைய னேயிப் பிறவி யறுத்துநின்
மெய்யர் வாழ்சிவ லோகத்தின் மேவிநா
னுய்ய வேண்டுமொன் றின்னமு முண்டரோ

வள்ள லென்மா புள்ளவு மற்றைய
புள்ளு மிந்தப் புனித மலர்த்தடத்

துள்ள மீனுயி ருண்ணினெனக் கான்முன்
தள்ளொ ணாத பழிவந்து சாருமே

என்று மித்தட மீனில வாகநீ
நன்று சால்வர நல்கென வெள்ளிமா
மன்று ளானும் வரந்தந்து போயினான்
சென்று நாரை சிவலோகஞ் சேர்ந்ததால்"

என்னும் திருவிளையாடற் புராணத்தால் அறியவரும். இவற்றை யுன்னியே தெய்வப் புலவரும்,

"கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
யெல்லா வுயிருந் தொழும்"

"தம்முயிர் நீப்பினுஞ் செய்யற்க தாம்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை" என்றனர்.

ஆனதால் சீவ இம்சையைத் தான் செய்யாததுடன் பிறர் செய்து அளிப்பதையும் பெற்று அருந்தாதிருப்பதே அகிம்சா தர்மத்தின் அன்புடைத்தாகும். அவ்விதமின்றேல் கொன்றவனது பாவத்திற் பெரிதும் தின்றவனே அடைகின்றான். ஏனெனின் உண்ணும்பொருட்டு ஊன் வாங்காரெனின் கொல்வோர் ஒருவரும் இல்லை. இதனை,

"தினற்பொருட்டாற் கொள்ளா துலகெனின் யாரும்
விலைப்பொருட்டா லூன்றருவா ரில்"

என நாயனார் கூறினர்.

ஆகவே ஒருவன் உயிர்வதை செய்யுங்கால் அவ்வுயிர் அம்மா அம்மாவெனக் கதறுகின்ற சத்தங்கேட்டும் அக்கொலை

யை மறுக்காது பின்சென்ற மாதவசிக்கும் நரகம் வந்துறுமெனின் அம்மாமிசத்தை உண்டவர் அடையுந்துன்பத்தைக்கூறவு முடியுமோ. இதனை,

"அம்மா வெனவல்ற வாருயிரைக் கொன்றருந்தி
யிம்மா னுடரெல்லா மின்புற் றிருக்கின்றார்
அம்மா வெனுஞ்சத்தங் கேட்டகன்ற மாதவற்கும்
பொய்மா நிரயமென்றாற் புசித்தவர்க்கென் சொல்லுவதே"

என்னும் பதி பசு பாச விளக்கத்திற் கூறுவதால் கொன்றவன், கொல்லச்சொன்னவன், அறிந்தவன், சமையல் செய்தவன், கொலை செய்வதைக்கண்டும் விலக்கிடாது சென்றவன், அவற்றை யுண்டவன் முதல் யாவரும் கொடிய நரகத்தை அடைவர் என்பதைப் பெருந்தேவனார்,

"கொன்றான் கொல்லச்சொன்னான் கூடவருத் தானட்டான்
தின்றான் விலக்கிடான் சென்றொன்று கொன்றவனைக்
குட்டவன்க ணிட்டெரிக்க வெந்துகொடு வெந்நரகிற்
பட்டழுன்று வீழ்வார் பதைத்து"

எனப் பாரதத்திலும்,

"கொன்றான் கொலையை யுடன்பட்டான் கோடாது
கொன்றதனைக் கொண்டான் கொழிக்குங்காற் கொன்றதனை
யட்டா னடவுண்டா னைவரினு மேலுளவாக்
கட்டெரிந்த பாவங் கருது" எனச் சிறுபஞ்சமூலத்தும்,

"நன்றாகு மாக்கம் பெரிதெனினுஞ் சான்றோர்க்குக்
கொன்றாகு மாக்கங் கடை" என வள்ளுவரும் கூறினர்,

"இனி சீவகாருண்யத்தால் வரும் நன்மையைப்பற்றி
கொல்லாமை யெத்தனை குணக்கேட்டை நீக்கும்"
எனத் தாயுமானவரும்,

"அற்றவர் வருத்த நீக்கி யாருயிர் கொண்டு நிற்குந்
துற்றவி ழிதல் செம்பொற் றுறக்கத்திற் கேணி யாகும்"
எனச் சீவகசிந்தாமணியும்,

"பிரிவறக் கொன்று தின்னுங் கடைப்படு பிறப்பு நாரை
வரனுறு தேவ ராகி வான்றொழ விருப்பக் கண்டீர்
கருதுதி ரென்றும் பொல்லாக் கடையரா யினுங்கொல் லாம
லானவந் திப்ப ரேல்வா ளுள்வதற் கைய மின்றே"
எனத் தனிப்பாடற்றிரட்டினுங் கூறுவது காண்க.

## 3-வது:— களவு.

பிறர் பொருளைச் சோர்வு பார்த்தும், வழிமறித்தடித்தும் அபகரிப்பது களவாகும். இப்படிக் களவுசெய்துகொண்டுவந்து தாம் அனுபவிக்கும்போழ்து அப்பொருளை இழந்தாரது மனோ துன்பத்தை ஆராய்வோமாயின் நமது கைப்பொருளைத் தோற்ற காலத்து நம்மனம் எவ்விதந் துன்புறுமோ அஃதுபோல் அவர்கள் மனம் வருந்துமென்பது நன்கு புலப்படும். அவ்விதம் புலப் படுங்கால் நாம் அப்பொருளைவைத்து அனுபவிக்கும் இன்ப மெல்லாம் அதிகத் துன்பமாகத் தோன்றுதோ. அப்படித் தோன்றின் அவர் மேலும் களவுசெய்ய விரும்புவரோ, விரும்பார். ஆகவே எப்பிறவியிலும் உயரிய மக்கட் பிறவியை அடைந்தும் பெரும்பான்மையோர் பகுத்தறிவில்லாத மிருகங்களைப்போன்று

ஏழை மக்களின் பொருளைத் திருடுசெய்தும், வஞ்சித்தும், தாம் சுகமாக அனுபவிக்க நினைக்கின்றார்களே அந்நினைவை நிறைவேற்றுந்தருணம் யாராவது கண்டுபிடித்தால் அங்ஙனம் மீளாத் துன்பத்தைப் பெறுவதுடன் அப்பொருளையும் அன்றே இழந்து விடுவோமென்பதை அறியாத இவர்கள் போலீசார்களால் திருடர்கள் படும் பாட்டை அறிந்திலர்போலும். இதனை,

"களவின்கண் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமந் தரும்"

"களவினா லாகிய வாக்க மளவிறந்
தாவது போலக் கெடும்"

என்னும் நாயனாரது அருண்மொழியே அன்றற்கு உறுதிபயப்பதாகும். மேலும் அத்தகைய திருடர்கள் அருளைக்கருதும் அன்பிலராகி இன்பம் அனுபவித்தற் கேதுவாகிய சுவர்க்காதி பதங்களுக்குஞ் செல்லமுடியாது தள்ளுண்டு நரகிற்காளாகுவர். இவ்வுண்மையைப் பொய்யா மொழியாரும்

"அருள்கருதி யன்புடைய ராதல் பொருள்கருதிப்
பொச்சாப்புப் பார்ப்பார் கணில்"

"கள்வற்குத் தள்ளு முயிர்நிலை கள்ளார்க்குத்
தள்ளாது புத்தே ளுலகு" என விளக்கியருளினர்.

ஆதலின் இம்மை மறுமையாகிய இரண்டிலும் துன்பத்தைத் தருவதாகிய களவை மனத்திலும் நினைக்காது மறத்தலே மாண்பு. அவ்வாறின்றி நினைக்கினும் தீமை நிச்சயமுண்டாம் என்பதை,

"உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறர்பொருளைக்
கள்ளத்தாற் கள்வே மெனல்" என்பதனாலுணர்க.

## 4-வது:— கள்.

கள், அபின், கஞ்சா முதலியவை அறிவை மயக்கும் பொருள்களாகும். அவைகளை உண்பவர் அறிவையும் நல்லொழுக்கத்தையும் இழந்து தீயொழுக்கத்தையே அடைவர். ஆனதால் கள் முதலிய லாகிரி வஸ்துக்களை உபயோகிப்பவர் தமக்குச் சிநேகிதர்செய்த நன்மையையும் தாம்கற்ற நூற்பொருளையுஞ் சிந்தியார். தம்மைத்தொடர்ந்த பழிபாவங்களையும் அவைகளாலே தமக்குவிளைந்த துன்பத்தையும் அறியார். இவ்வியல்புடையவர்க்கு மன, மொழி, மெய்கள், தம் வசப்படாது அறியாமையால் களிப்பும் மயக்கமுமே இயற்கையாகும். அதனால் அவரிடத்துச்சண்டையும், கொலையும், களவும், பொய்யும், தரித்திரமுமே குடிபுகும். இத்தன்மையோர் இம்மையில் பழிக்கும் பாவத்திற்கும் ஆளாகி மறுமையிலும் இயமதூதர்களால் தண்டிக்கப்படுவர். இப்படி இம்மை மறுமையிலும் துன்பத்தைத் தருவதாகிய கள்ளை விலைகொடுத்து வாங்குவோரது தன்மை எத்தகையதெனின் பொருள் கொடுத்துத் துன்பம் வாங்குவாரது தன்மைக் கொப்பாகும். இது கருதியன்றோ நாயனாரும்,

"கையறியாமை யுடைத்தே பொருள் கொடுத்து
மெய்யறியாமை கொளல்" என விளக்கினர்.

இப்படி உண்மையை அறியவிடாது மயக்குகின்ற கள்ளை அருந்தின், அக்கள், அவரது அறிவைக்கெடுக்கும். வலியைக் குறைக்கும். அழிவில்லாத மரியாதையைக் கெடுக்கும். அறிவுடையோர்கள் மதிக்கத்தகாத கௌரவத்தை விளைவிக்கும். அன்னையும் வெறுத்திடும் தன்மையைக்கொடுக்கும். கோபத்தை

உண்டாக்கும். எதிரிகட்கு அஞ்சாத செய்கையைத்தரும். புன் கோட்டி கொளச்செய்யும். இத்தகைய தூர்க்குறி குணங்களை விளைவிப்பதாகிய கள்ளை அருந்துதல் கூடாதென,

விநாயகபுராணம்

"அறிவை யழிக்குஞ்செயலழிக்குமழியா மானந் தனையழிக்குஞ்
செறியு மறிஞர் மதியாத செருக்கை விளைக்கு மீன்றாளு
முறியும்வெறுப்பு மிகவிளைக்குமுனிவு விளைக்கும்பகையஞ்சாக்
குறிகள் விளைக்கும் நகைவிளைக்குங்கொள்ளேல் கள்ளுண்டலை
[மைந்தா"

எனக் கூறுகின்றது.

இவ்வித கொடுஞ் செயலுடைய கள்ளை அருந்துவோரை மன்னிக்கவொண்ணுமனக்குறையும் தாய் பொறுப்பாள் என்னும் பெருங்கருணையை உடைய அன்னையும் வெறுத்திடு வாளெனின் அறிவுடையார் மன வேறுபாட்டைக் கூறவேண்டிய தில்லை. ஆகலின் இதனை உண்ணுவோர் உத்தமர்களால் நன்கு மதிக்கவேண்டாதார் ஆவர் என்பதுபற்றியே நாயனாரும்,

"ஈன்றாள் முகத்தேயு மின்னாதா லென்மற்றுச்
சான்றோர் முகத்துக் களி"

"உண்ணற்க கள்ளை யுணிலுண்க சான்றோரா
லெண்ணப் படவேண்டா தார்" எனக் கூறினர்".

இனி இவர்கள் அடையுங்கதியாவது கள்ளை விற்போர், கள்ளை அருந்துவதற்கு உடன்படுவோர், கள்ளை அருந்தினோர் முதலான வர்கள் நரகத்தில் கற்பகாலம்வரை அருந்திப் பின் மலங்களில்

புழுவாய்ச் செனித்து அம்மலத்தையே அருந்திப் பின்னும் இறந்து சொல்லற்கரித்தாகியதும் மிகவும் கொடிய துன்பத்தைத் தருவதுமாகிய ரௌரவாதி நரகில் அடுத்தடுத்து மூன்று காலங்களிப்பர். இதற்குச் சான்றாக,

கூர்மபுராணம்

"கள்விலை பகர்வோர் கள்ளினை நுகர்ந்தோர்
கள்ளருந் துததற்குடன் படுவோர்
கள்ளருந்தினரை மகிழுனர் நரகிற்
கற்பகா லங்கிடந் தழுந்தி
எள்ளுறுந் தீய மலப்புழு வாகி
மலத்தினை நுகர்ந்துபின் னிறந்து
விள்ளருங் கொடிய ரௌரவ நரகின்
மீட்டுமீட் டுமூன்றுநாட் கழிப்பர்" எனக் கூறுவ

தாலும், அத்தகைய துன்பத்தைத் தருவதாகிய கள் முதலிய லாகிரி வஸ்துக்களை அருந்தாதொழிக்கவேண்டும்.

## 5-வது:— காமம்.

இது ஆண் பெண் ஆகிய அனைவர்க்கும் மன்மதன் சரத்தால் உண்டாகும் ஆசையாகும். இவ்வாசையைப் பாவமில்லாதவழியில் அனுபவித்தற்கு ஏதுவாக ஸ்திரீ, புருஷர்கள் இருவர்க்கும் விவாகம் என ஒன்றேற்பட்டது. இப்படி விவாகம் செய்து கொண்ட சதிபதி இருவரும் இல்லறம் என்னும் நல்லறம் புரிந்தால் தர்மார்த்த காமமோக்ஷங்களையும் முறையே பெறுவதுடன் மோக்ஷத்தை விரும்பும் துறவி முதலானவர்களினும் தலைசிறந்தவராவர். இதனை,

"முற்றத் துறந்தாற்கேன் முன்னின்று னில்நின்ற
கொற்றச் சனகன் குமரேசா—உற்ற
இயல்பினன் இல்வாழ்க்கை வாழ்பவ னென்பான்
முயல்வாரு ளெல்லாந் தலை" என்பதே

நன்குணர்த்துகின்றது. இத்தனை உயர்வுடைத்தாகிய கிரகஸ்தாசிரம நெறியில் முறையோடு வாழாது ஆண் ஆயினும், பெண் ஆயினும் பிறரை விரும்புவரெனின் அவர்கள் பஞ்சமா பாதகத்திற் காளாகுவர். மேலும் உலகத்தின்கண் உள்ள கொடிய பெரும் பாவங்களையே பிரமன் பெண்ணுருவாக்கி எமனுக்கு உதவியாகக் கொடுத்தனன்போலும். எமன் தன்னரசுரிமை செலுத்துதற் கேதுவாக அவர்களை இவ்வுலகத்திற்கு அனுப்பிய தூதுவரென அறியாது அவர்களிடத்தில் பெரிதாகிய சுகம் இருக்கின்றதென விரும்பும் துற்புத்தியுடையோரை என்ன சொல்வது. இவற்றை யுன்னியல்லவா பட்டினத்தடிகளும்,

"சீரும் வினையது பெண்ணுரு வாகித் திரண் டுருண்டு
கூரு முலையு மிறைச்சியு மாகிக் கொடுமை யினற்
பீரு மலமு முதிரமுஞ் சாயும் பெருங்குழி விட்
டேருங் கரைகண் டிலேனிறை வாகச்சி யேகம்பனே"

"காதென்று மூக்கென்றுங் கண்ணென்றுங் காட்டியென் [கண்ணெதிரே
மாதென்று சொல்லி வருமாயை தன்னை மறலிவிட்ட
தூதென்றெண் ணுமற் சுகமென்று நாடுமித் தூர்ப்புத்தியை
எதென் றெடுத்துரைப் பேன்" எனவுங் கூறினர்.

இப்படிக் கபடமே காரணமாகி அடுத்துக்கெடுக்கும் நயவஞ்சிய

ராகிய அரிவையரை நமது தூர்ப்புத்தியால் நினைப்போமாயின் நாம் எழு பிறவி எடுக்கினும் அப்பாவம் நம்மைவிட்டு நீங்குமோ. இதனை,

"மண்ணுலகி லுள்ள வரம்பில் பெரும்பாவத்தைப்
பெண்ணுருவ மாகப் பிரமன் படைத்தனனால்
அண்ண லஃதுணர்த்தி யன்னவரைச் சிந்தைதனி
லெண்ணவரும் பாவ மெழுமையினு நீங்குவதோ"

என்பதனால் உணரவரும். இதன்றியும் அன்னாரை நினைத்தபின் ஒருவாறு தேறி மறந்துவிடுவோமெனின், மறக்கவுங் கூடுமோ. அந்தோ! நெருப்பாயினும் அதனைத் தொட்டால் சுடுமன்றி நீங்கிவிட்டால் சுடாதே. இக்கொடிய மாதரை நினைக்கும் காமாக்னியோ மனதில் நினைக்கினும் சுடும். காதில் கேட்கினும் சுடும். நினைத்ததை விட்டு விலகினும் சுடும். ஆதலின் கள்ளைப் பார்க்கினும் கொடியது காமத்தீயேயாகும். இதனை,

"உள்ளினுஞ் சுட்டிடு முணருஞ் கேள்வியிற்
கொள்ளினுஞ் சுட்டிடுங் குறுகி மற்றதைத்
தள்ளினுஞ் சுட்டிடுந் தன்மை யீதினாற்
கள்ளினுங் கொடியது காமத் தீயதே" என்பதனால்

வெள்ளிடைமலை எனத் தெள்ளிதிலுணரலாகும். இக்கொடிய காமத்தால் பிறன்மனை விரும்பின் அவை அவர்கட்குத் தீமை யாவையும் உண்டாக்கும். சிறப்பையும் அழிவில்லாதசெல்வத்தை யும் கெடுக்கும். நல்லறிவையும் தொலைக்கும். மோக்ஷ வழியைத் தடுக்கும். அஞ்ஞானத்தைக் கொடுக்கும். இத்தன்மையால் ஆலோசிக்குமிடத்துக் காமமின்றியே வேறொரு பகை உலகத்தில்

உண்டோ. இதற்குச் சான்ருக முன்னம் மோகினியால் இராக்கதர் இருவரும் தாரை என்பவளால் சந்திரனும், சீதாபிராட்டியால் இலங்கையரசனும் பட்ட துன்ப முதலியவை புராணவாயிலாக இயாவரு மறிந்ததே. மேலும் தேவர்கோனுகிய இந்திரன் கௌதமர் மனைவி அகலிகையால் விலக்கமுடியாத துன்பந்தருவதாகிய பகக்குறியை ஏற்றான் என்பதையும்

"சந்திரற்கு நேருவமை சாலுந் திருமுகத்துப்
பைந்தொடிக்கை நல்லார் பலரும் புடைசூழக்
குந்தமொத்த நாட்டத்துக் கோதமனார் பன்னியினு
லிந்திரற்கு நீங்கா விடற்பழியொன் றெய்தியதே"

என்னும் இவைகளை யுணர்ந்தன்றோ.

மேலோரும் தீமையாவுக்கும் காமமே காரணமாகி இது ஒன்றே சத்துருவாகின்றதேயன்றி வேறொரு பகை இல்லை என்பதை யாவரும் அறியும்பொருட்டே

"தீமையுள்ளன யாவையுந் தந்திடுஞ் சிலப்புந்
தோமில்செல்வமுங் கெடுக்குநல் லுணர்வினைத் தொலைக்கு
மேமநன்னெறி தடுத்திரு ளுய்த்திடு மிதனுற்
காமமின்றியே யொருபகை யுண்டுகொல் கருதில்" எனக் கூறினர். இதனுல் காமமே பஞ்சமா பாதகங்களுக்கும் காரணமாகி முடிவில் நரகபூமியைக் காணியாகக் கொடுக்கும் என்பதை அறிந்தோர்.

"காமமே கொலைகட் கெல்லாங் காரணங் கண்ணோ டாத
காமமே களவுக் கெல்லாங் காரணங் கூற்ற மஞ்சுங்

காமமே கள்ளுண் டற்குக் காரண மான தாலே
காமமே நரக பூமி காணியாக் கொடுப்ப தென்றார்"

ஆகையால் காமத்தை விரும்பாதொழிப்பது வேதநூன்முறையாகும். ஆகவேசாயதிபிமானத்தாலும், பஞ்சமாபாதகங்களாலும், வரும் துன்பத்தையுணர்ந்து அவைகளை அறவே ஒழிக்கவேண்டும். அப்படி ஒழிக்கவில்லையேல் அவர்கட்கு இறைவனின் திருவருளின்றாம். திருவருளின்றேல் வீடின்றாம். வீடின்றேல் பிறவி நீங்காது. இவற்றை,

"சரண கதியென்று சார்ந்தடி பணியாமல்
வருணச் சிரமவிதி வழுவா திருக்கினுஞ்
சென்னு திகள் விடுமோ" எனவும்

"புலைகளொடு கொலைகளவு கட்காமத்தைப்
புந்திதனிற் கருதாமல் நிற்பையாகில்
மலைமகளோர் பாகனுந்தான் வசமாய்நிற்பன்
மாதவமும் நிலைக்குமிந்த வழிநில்லாற்கு

அலைகடலிற் றுரும்பதுபோல் மனந்தள்ளாடு
மறிவுதனக் கழிவுவரு மதுவல்லாமல்
நிலைதவரு மெழுபிறப்பு நீங்காதென்றே
நீணிலத்தி லருமறைக ணிகழ்த்துமாறே" என்னு

மிவைகளால் சாதியபிமானமும், பஞ்சமா பாதகங்களும் சீவர்களுக்கு யென்றும் மீளாத துன்பத்தையும், நரக வாதனையையும் விளைவிக்கும் என்பதையுணர்ந்து அவ்வித்துக்கள் முளைக்கொள்ளாதபடி மனமென்னும் ஓட்டிலிட்டு அறிவென்னும் அக்கினியால்

கருகவருத்துக் கொட்டிவிட்டு எந்நாளும் அழிவில்லாத இன்பத்தையடைதற்கு ஏதுவாகிய பதி, பசு, பாச உண்மைகளை விசாரிப்பது பண்புடைத்தாகும். இவற்றுள்

## பதி.

பதியாவது கடவுள். இவர் நித்தியனும், ஏகனும், அநேகனும், அணுவிற்கணுவாகவும், அண்டம், புவனம், பாதாளமுதலிய பகிரண்டங்களுக்கும் பிர்மாண்டமாகி அகத்தும் புறத்தும் சர்வவியாபக வியாப்பியனாக இருப்பர். இவர் தன்வயத்தர், தூயவுடம்பினர், இயற்கையுணர்வினர், உற்றதுணர்பவர், இயல்பாகவே பாசங்களைவிட்டு நீங்குபவர், பேரருளுடையவர், முடிவிலாத ஆற்றலும், அளவில்லாத இன்பமும் ஆகிய எண்குணமுடையவராவர். இத்தகைய சர்வவல்லரே யாவர்க்கு மேலாகியவர் ஆனதால் இவரையே பரமேசுரன் யென்பதாம்.

## பசு.

பசுவாவது சீவன் சீவர்கள் நித்தியராய் சரீரந்தோறும் வெவ்வேறாய், பிறர்வயமுடையராய், அசுத்த உடம்பினராய் ஒருவர் அறிவிக்க அறிபவராய் உற்றதை உணராதவராய் இயல்பாகவே பாசத்தடையுடையவராய் சிற்றறிவுடையராய், முடிவில்லாத சிறுமையும் வரம்பில்லாத துன்பமும் உடையராய் சர்வ அவலர்களாய் ஆகுவர்.

## பாசம்.

பாசமானது அஞ்ஞானமெனினும் அழுக்கெனினும் தாமெனினும் பொருந்தும். இந்த அஞ்ஞானம் சீவர்களுக்கு செம்பிற்

தளிம்புபோலும் அரிசியில்த்தவிடுபோலும் உற்பத்தியாகி சீவர்களது ஆன்ம விளக்கமாகிய அறிவை மறைத்து இருக்கும். அங்ஙனம் சீவர்கள் அவித்தை வசத்தராகி தம்மையுந் தலைவனையும் அறியாது அந்தக்கரணங்களோடு கலந்து ஸ்தூலசரீரத்தை தானென்றபிமானித்து நிற்பர். இவர்களை பசுபதியாகிய அம்பலவாணர் சர்வ ஆன்மாக்களிடத்தும் உயிர்க்குயிராகி அந்தர்யாமியாக நின்று இயக்குவது மரப்பாவைக்கு சூஸ்திரமிட்டாட்டும் சூஸ்திரிகன்போலும் சீவர்களது இருவினைப் பாசத்தாலும் மனமென்னும் குரங்கைப்பிணைத்து நன்மார்க்கம் துன்மார்க்கமாகிய இரண்டுவழியிலும் அவரவர் கன்மத்துக்குத் தக்கவாறு நடத்தி கர்மத்தின் நியதிக்கு மேற்செல்ல நினைக்கினும் ஆங்கு செல்லவிடாது துன்புறுத்தித் தடைப்படுத்துவர். இவ்விதம் தோன்றாத்துணையாக நின்று நடத்துவதை அபரோக்ஷமாக உணர்ந்த ஞானிகள்,

"அறம்பாவ மென்னு மருங்கயிற்றாற் கட்டி" யெனவும்

"ஊட்டுவிப்பானு முறங்குவிப்பானு மிங்கொன்றோடொன்றே
மூட்டுவிப்பானு முயங்குவிப்பானு முயன்றவினை
காட்டுவிப்பானு மிருவினைப்பாசக் கயிற்றின்வழி
யாட்டுவிப்பானு மொருவனுண்டேதில்லை யம்பலத்தே"

"கூட்டிப்பிடித்து வினைவழியே கூத்தாட்டினையே"

எனவும் கூறுவது காண்க. ஆன்மாக்களுக்கு தீவினை நிறைந்தும், நல்வினை குறைந்தும் இருப்பதே இயற்கை. ஆனதால் அந்நல்வினைக் கயிறும் சுருக்கமாக இருந்து சீவர்களை நன்மார்க்கத்தில்

நீடித்துப்போகவிடாது தடைப்படுத்தும். தீவினைக்கயிறு அதிக நீளமாகவிருந்து துன்மார்க்கத்தில் அத்தீவினை அளவிற்கே நீடித்துச்செல்லவிடும். இவ்விரண்டு மார்க்கத்துள்ளும் நன்மார்க்கம் ரேட்டுவழியும் துன்மார்க்கம் காட்டுவழியுமாகும். இவற்றுள் ரேட்டுவழியிற் செல்லாது காட்டுவழியிற்சென்றவன் முட்களாலும் விஷஜெந்துக்களாலும், துஷ்டமிருகங்களாலும், திருடர்களாலும் துன்பமடைவதுபோல நன்மார்க்கத்தில் செல்ல முடியாது துன்மார்க்கத்தில் சென்ற சீவர்கள் இம்மையில் நோயாலும், வருமையாலும், மிடியாலும் துன்புற்று மாணத்திற்குள்ளாகி மறுமையில் இயமதூதர்களால் தண்டிக்கப்பெற்று கர்மத்திற்குத் தக்கவாறு தேவ வருஷம் நியதிவரைக்கும் நரகத்தழுந்தி மறுபடியும் பூமியில் இழிந்த பிறவிகளையெடுத்து அப்பிறவியிலும் நோய் முதலிய துன்பத்தால் வருந்துவர். இத்தகைய துன்பத்தைவிடுத்து என்றும் அழியாத இன்பத்தைப் பெற்று வாழ்வதற்கு புண்ணியமே போந்தபொருளாகும். அதனால் அப்புண்ணியங்கள் யாதென விசாரித்து அறிய வேண்டும்.

உலகியற் கட்டளை

முற்றிற்று.

---

உ

பரப்பிர்ம்மணே நம:

# சிவபுண்ணியக் கட்டளை.

புண்ணியமாவது மனம், வாக்கு, காயங்களாலும் பொருள் முதலியவற்ருலும் பிறருக்கு உதவிபுரிவதும் சிவகைங்கரியங்கள் செய்வதுமாகும். இப்புண்ணியம் பாச புண்ணியம், பசு புண்ணியம், பதி புண்ணியம் என மூன்று பிரிவாகும். இவற்றுள்,

பாச புண்ணியமாவது: ஒருவன் தனக்குத் தொடர்புடையாராகிய மனைவி, மக்கள், சுற்றத்தார், நட்பினர், முதலியோர்க்கு உதவி செய்வதாகும். இவற்ருல் மறுமைக்குப் பயனின்ரும்.

பசு புண்ணியமாவது: தனக்குத் தொடர்பில்லாத யாவராயினும் அவர் துன்புறுங்கால் அவரது ஜீவத்தன்மையைக் கருதி அவருக்குத் தம்மால் இயன்ற உதவி புரிதல், தானஞ்செய்தல், யாகஞ்செய்தல், தீர்த்தமாடல், விரதங்காத்தல், ஆகிய இவைகளாம். இப்புண்ணியங்களால் ஆய பயனை விண்ணுலக முதலிய இடங்களிற் சென்று அனுபவித்து, மீண்டும் இவ்வுலகிலே வந்து பிறக்கும் என்பது நிச்சயம். அன்றி, சில சமயம் அவ்வுயிர்கள் அப்புண்ணியப் பயனுகிய இன்பங்களை

அனுபவிக்கும் உலகளவுங்கூட எய்த முடியாது மாறினும் மாறும். அஃதென்னையோவெனின் அப்புண்ணியங்கள் அஞ்ஞான மயக்கத்திற் கேதுவாகிய போகத்தைக் கருதிச் செய்வதாகையால் அப்போகத்தை அனுபவிக்க எண்ணிய மயக்கத்தால் நல்லறிவின்றிச் செய்யத்தகாதன செய்து அதனால் தான் முன் செய்திருந்த புண்ணியப் பயனை இழந்ததுமன்றிப் பெரிதாகிய துன்பத்திற்கும் ஆளாவர். இதற்குச் சான்றாக,

## நகுடன் வரலாறு

நகுடன் என்னும் நராதிபன் பசு புண்ணியமாகிய (108) நூற்றெட்டு அஸ்வமேத யாகங்களைச்செய்து அப்புண்ணியப்பயனால் தேவேந்திரனாகி இந்திராணியின் இன்பத்தை அனுபவிக்கும் எண்ணத்துடன் ஏழு முனிவர்கள் தன் சிவிகையைத் தாங்க, தான் அதில் ஆரோகணித்துச் சென்றான். அப்பொழுது தான் கொண்ட காம மய்க்கத்தால் மயங்கி தனது சிவிகையைத் தாங்குவோர் மிக்வும் தவம் நிறைந்த முனிவர்களல்லவா என்பதை உணராது விரைவில்ச்செல்க என்னும் பொருளைத் தருவதாகிய தேவபாஷையால் "சர்ப்ப சர்ப்ப" என்று கூறி அவர்களை ஏவினான். அப்பொழுது அவ்வெழுவருள் தலைசிறந்தவரும் அருந்தமிழ் முனிவருமாகிய அகஸ்தியரால் சாபமேற்று பாம்புருவம் பெற்று பொன்னுலகிற்தும் போகமாட்டாது இடைவழியிலேயே தடைப்பட்டு, தான் செய்த பசு புண்ணியப் பயனையும் இழந்தான். இதனை,

"முனிதரில் மகவா னாகி வருபவன் சிவிகை தாங்கும்
புனிதமா தவரை யெண்ணான் புன்கணோய் விளைவும் பாரான்

களிதரு காமந் துய்க்குங் காதலின் கருத்தி னாலே
இனிதயி ராணி பாற்கொண் டேகுமின் சர்ப்ப வென்றான்."

சர்ப்பமா கெனமுற் கொம்பு தாங்கிமுந் நடக்குந் தென்றல்
வெற்பனு முனிவன் சாபம் விளைத்தனன் விளைத்த லோடும்
பொற்பமா சுணமே யாகிப் போயின னறிவிலாத
அற்பரா னவர்க்குச் செல்வ மல்லது பகைவே றுண்டோ"

என்னும் இதனால் பசு புண்ணியத்தின் பயன் அறியக்கிடக்கின்றது.

புதிதாகிய அமுதத்தைப் பானம் பண்ணுவதும் கற்பகத் தருவின் நீழலில் விளக்கமாக வீற்றிருக்கும் தன்மையும் சுவர்க்க லோகத்தில் வெள்ளை யானையின்மீது ஆரோகணிக்கும் செல்வச் சிறப்பும் பூலோகத்திற்கு அரசராவதுமாகிய இவை எல்லாம் நல்லறிவின்றிய உன்மத்தர், கிருக்கர் முதலியோர் வேண்டும் மயக்கமாகும் என்பதைத் தாயுமானப் பெருந்தகையாரும்

"புத்தமுத போகமுங் கற்பகநன் னீழலிற்
பொலிவுறவி ருக்கு மியல்பும்
பொன்னுலகி லயிராவ தத்தேறு வரிசையும்
பூமண்ட லாதிக்க முடம்
மத்தவெறி யினர்வேண்டு மாலென்று தள்ளவும்"

எனக் கூறியதும் இதுபற்றியேயாகும் என்பது மலைவிளக்கு.

பதி புண்ணியமாவது: ஆன்மாக்கள் அறிந்து வழிபட்டு

உய்யுமாறு சிவலிங்கமூர்த்தமாய் எழுந்தருளி இருக்கும் திருக்கோயிலில்த்திருப்பணி செய்வதும் சகள வடிவாகிய சிவலிங்கப் பெருமானை மனவாக்குக் காயங்களால் சகுணோபாசனைசெய்து சிவலிங்கமூர்த்திக்கு அபிஷேக ஆராதனை முதலியனசெய்வதும் சங்கம வடிவாகிய சிவனடியார்களுக்கு உறைவிடமாகிய திருமடங் கட்டுதலும், ஆங்கே எழுந்தருளும் சிவனடியார்களின் திருக்குறிப்பினின்றும் தவிராது திருத்தொண்டுசெய்து அவர்கள் வேண்டுவனவெல்லாம் கொடுத்து உதவிபுரிவதுமாகிய இவைகளே பதி புண்ணியமாகும். இவ்விருவகைப் புண்ணியங்களுள் சிவனடியார்கள் விரும்பியவற்றைச் செய்யாதுவிடுத்துச் சிவலிங்கமூர்த்திக்கு அபிஷேக ஆராதனை முதலியன செய்யினும் அவற்றால் சிவனுக்குப் பிரியமின்றாம். ஒருவன் சிவலிங்கமூர்த்திக்குச் செய்யான் ஆயினும் சிவனடியார்கள் விரும்பியவற்றைச் செய்வானேல் அது சிவனுக்கே செய்ததாகும். அதெப்படியாகுமெனின் பரமேஸ்வரன்எவ்விடத்தும்பரிபூரணன்ஆயினும் எல்லாவிடங்களிலும் மலரின் மணம்போலவும், அக்கினியிற் சூடுபோலவும் அபின்னப்பட்டு அதிரிசியமாகவும் சிவலிங்கத்தினில் பாலில் நெய்போல அபின்னப்பட்டு அதிரிசியமாகவும்நிற்பன். தம்மடியாராகிய மெய்யன்பர்களின் உள்ளத்திலோ மோரில் நெய்போல பின்னப்பட்டுத் திரிசியமாக நிற்பன். இவற்றுள் மலரின் மணமும், அக்கினியின் சூடும் பிரித்தறியமுடியாது. பாலின் நெய்யைப் பக்குவ முயற்சியால் பிரித்தறியக்கூடும். மோரில் நெய்யோ பக்குவம் பண்ணி எடுத்ததாகும். ஆனதால் சிவனடியாரது உள்ளத்தில் மோரில் நெய்போல அபரோக்ஷமாகச் சிவபெருமான் விளங்குவதால் சிவனடியார்க்குச் செய்வதே சிவனுக்

காகும். மேலும் ஒரு பசுவாகிய மிருகத்தின் சரீரத்தில் உள்ள இரத்த விருத்தியே பால் ஆயினும் அவ்விரத்த முழுதும் பால் ஆகாது. அதன் மடுக்குழியில் இரங்கிய இரத்தமே பால் ஆகின்றது. அப்படியாகிய பாலை அதன் இயற்கை வழியாகிய மார்க்காம்பினன்றி வேறு செயற்கை வழியால் வாங்கமுடியுமோ. அப்படி வாங்கினும் அது சுத்தமாகிய பால் ஆகுமோ? ஆகாது அதனை அவ்வியற்கை வழியாகிய மார்க்காம்பிற்பெறின் அப்போது அதன் உண்மை வடிவாகிய வெண்மைநிறத்தைக் காட்டுமன்றோ. அதுபோல் பரமேஸ்வரன் அங்கு இங்கு என்னுதபடி எங்கும் நிஷ்கள பரிபூரணன் ஆயினும் ஆன்மாக்களுக்கு அனுக்கிரகிக்கவேண்டிச் சகளவடிவமாகிய சிவலிங்க மூர்த்தமாக எழுந்தருளினர். அத்தகைய சிவலிங்கமூர்த்தியை வழிபடும் ஆன்மாக்களுக்கு அவ்விலிங்கத்தின்கண் பாலின் நெய்போல தோன்றுந்துணையாக இருந்து பரகியபரோக்ஷ ஞானத்தை அருளுவர். அப் பாகியபரோக்ஷ ஞானமுதிர்ந்தவர்கட்கு அத்வைதானுபவத்தைத் தரும் உண்மை ஞானமாகிய ஆந்தர அபரோக்ஷஞானத்தை அருளும்பொருட்டே சிவனடியார் வடிவாக எழுந்தனர். அவ்வடிவத்தை சிவமாகப் பாவிக்கும் ஆன்மாக்களுக்கு மோரில் நெய்போல தோன்றுந்துணையாகி அருள்புரிவர்.

இத்தனை பெருமைவாய்ந்த திருவேடந்தாங்கிய மெய்யன்பர்களது உள்ளமே பரமேஸ்வரன் எழுந்தருளி இருக்கும் திருக்கோயிலாகும். இதனை,

"உள்ளம் பெருங்கோயில்............................"

"நல்லதொண்டர் தங்கள்............................"

"அகமே பொற்கோயில்............................"

உடம்பினை முன்ன மிழுக்கென் றிருந்தேன்
உடம்பினுக் குள்ளே யுறுபொருள் கண்டேன்
உடம்புளே யுத்தமன் கோயில்கொண் டானென்
றுடம்பினை யானிருந் தோம்புகின் றேனே"

என எழுந்த திருவாக்குகளே நன்குணர்த்தியது. மேலும் இதற்குச் சான்றாக,

தொண்டை மண்டலத்திலே திருநின்றவூரிலே வேதியர் குலத்துற்றவராகிய பூசலார் நாயனாரென்பவர் ஒருவர் இருந்தார். அவர் பரமேஸ்வரனிடத்தில் அதிபக்தர். அவர் பரமேஸ்வரனுக்கு ஓராலயங் கட்டுதற்கு விரும்பிப் பொருள் அற்பமுங் கிடைக்காமல் வருந்திப் பின் மனோபாவனையால் ஆலயங்கட்டத் துணிந்து அதற்குவேண்டிய உபகரணங்கள் யாவும் மானதமாகவே சேகரித்து இரவும் பகலுமாக நித்திரையின்றிக் கோயில் கட்டிமுடித்து பிரதிஷ்டை செய்தற்கு உரிய சுபதினத்தை எதிர்பார்த்திருந்தனர். அது நிற்க, அவ்வூர் அரசன் ஏராளமாகிய பொருளைச் செலவுசெய்து காயிகத்தால் ஓர் ஆலயம் அமைத்து பிரதிஷ்டைசெய்ய சுபதினங்குறித்தனர். அதை அறிந்த பூசலாரும் தமது கோயிற் பிரதிஷ்டையும் அத்தினத்திலேயே முடிக்கவேண்டுமென நிச்சயித்தனர். அப்படி நிகழும் போது அன்றிரவில் அம்பலவாணர் அவ்வரசனின் சொற்பனாவஸ்தையில் தோன்றி "அரசனே! எனது அன்பன் பூசலான்

கட்டிய கோயில் நாளேய்த்தினம் பிரதிஷ்டை செய்வதால் நாம் அங்கு செல்லவேண்டும். ஆனதால் நீ வேறோர் தினத்தைக் குறிப்பிடுக" என்று மறைந்தனர். உடனே அரசன் திடுக்கென விழித்து எழுந்து காலையில் பூசலார் இருக்கும் இடத்தை அடைந்து வணங்கி அடிகளே தாங்கள் கட்டிய திருக்கோயில் பிரதிஷ்டை செய்யும்நாள் இந்நாளென இறைவன் அருளினரே அக்கோயில் எங்குளதென வினவ, அவர் தாம் கட்டிய மானதக் கோயிலை புலப்படுத்தினர். அப்போது அரசன் வியப்புற்று சிவனடியாரது திருவுள்ளமே சிவபெருமான் எழுந்தருளும் திருக்கோயில் என மதித்து தாம் சேகரித்த சாமான் முழுவதும் கொண்டுவந்து பூசலாரின் திருவுள்ளக் கோயிலைப் பிரதிஷ்டை செய்யும்படி செய்து முடித்தனன் என்பது பெரியபுராணத்தால் அறியக்கிடக்கின்றது. இதுபற்றியே திருமூலநாயனுரும்,

"படமாடு கோயிற் பரமற்கொன் றீயின்
நடமாடு கோயில் நம்பற்கங் காகா
நடமாடு கோயில் நம்பற்கொன் றீயிற்
படமாடு கோயிற் பரமற்க தாமே"

எனக் கூறினர். மேலும்,

"எண்ணிலாத் தவங்க ளியாகங்கள் செய்யினும்
மீஸ்வர விஷ்ணுவா லாயத்திற்
பண்ணுலாக் கவிதை பாடினு மனேகம்
பாரினில் வரும்பய னேனு

கண்ணுலா வியநற் சுருதிமெய்ப் பொருளைக்
 கண்டா னடியா ருக்
குண்ணலா மெனவமு தளித்தவ னடைபல
 னுரைக்கவு முடியாதே"
அகரமோ ராறு கோடி யருந்தவம் பத்துக் கோடி
சிகரமீ ராறு கோடி செய்தநற் பலன்க ளியாவும்
மகரகே தனனை வென்ற மாதவ ரடியாற் கன்னம்
பகரவே கனவு கண்ட பலன்றனக் கொவ்வா தன்றே"

என்னுமிவைகளை என்றும் மறக்கற்பாலதன்றே. இத்தகைய சிறப்புடைச் செல்வர்களாகிய திடஞானியர் வந்துறுவதற்கும் அங்ஙனம் அவர் பசியைத்தீர்ப்பதற்கும் ஆங்கு அவர் திருவருளை நினைந்து என்பெலா நெக்குடைய உரோமஞ் சிலிர்ப்ப, உடல் இளக, மனதழலின் மெழுகாய் இடையறாது உருக, வருமழை போல் இரங்கியே இருவிழிகள் நீரிறைப்ப உருகுவதற்கும், அவ்விடத்துவரும் யாவர்க்கும் ஆன்மஞானத்தை உணர்த்துவதற்கும் உமாமகேஸ்வரி இடப்பாகத்திருக்கப்பெற்ற பரமேஸ்வரனது மெய்யன்பர்கள் பிரதிதினமும் உறைவதற்கும், திருக்கோயில்களில் இடங்கொடாது ஆங்குள்ள வேலைக்காரர்கள் சினந்துவிடுவதாலும் அவ்வூர்ப் புரங்களில் உளதாகிய பழைய குடிசைகளே அவ்வடியார்கட்கு மேற்கூறிய விஷயங்கள் அனைத்திற்கும் இடங்கொடுத்துச் சிறப்புற்று விளங்குவதால் அவற்றிற்குத் "திருமடம்" எனவும் சிறப்புப்பெயர் விளங்குவதுமன்றி இத்திருமடங்களின் சிறப்பு திருக்கோயிலுக்கும் இல்லை எனவும் கூறுவதாயிற்று. இதனை,

"திடம்பெற்றஞானி சேர்கையினாற் பசிதீர்கையினால்
உடம்புற்றவுண்மை யுறுகையினா லுபதேசிக்கையால்
இடம்பெற்றமங்கை பங் காளராடிய ரிருக்கையினால்
மடம்பெற்றபேறு திருக்கோயிலுக்கில்லை வையகத்தே"

என்னும் ஆன்றோரருண்மொழியே நன்கு உணர்த்துவதாயிற்று. இத்தன்மையினாலே சிவபக்தர்களது உறைவிடமே ஆன்மாக்கள் அடையும் மோக்ஷஸ்தானமாகிய சிவலோகமாகும். ஆங்கே இறைவர் உமாதேவி பாகராய் எழுந்தருளுவர் என்பதையும்,

"ஈசனும் ஞானி யிருந்துள விடத்தே இருப்பது முத்திதான்"

"பந்தனை விரலியு நீயுநின் னடியார்
பழங்குடி றொறுமெழுந் தருளிய பரனே"

என்னும் இவைகளே அறிவுறுத்துகின்றன. ஆகவே எப்புண்ணியங்களிலும் உயர்வுடைத்தாகிய பதி புண்ணியம் என்னும் சிவ புண்ணியத்தைத் தழுவியே பசு புண்ணிய முதலாகிய எப்புண்ணியங்களைச் செய்யினும் அவைகளால் வரும் பயனையும் முறையே பெறுவர் என்பது நிச்சயமாகும்.

மோகம் என்னும் கடலைக் கடந்து முத்தி என்னும் கரை சேர விரும்புவார்க்கு முதலில் பக்தி வேண்டும். பக்தி வருதற்கு நல்லறிவும் நல்லறிவு வருவதற்கு கற்றுணர்ந்தடங்கிய சாது சங்கத்தின் உறவும் வேண்டும். அப்படி அவாது சிநேகம் இருக்குமாயின் நாம் துன்மார்க்கத்தில் செல்லும் போழ்து அவர் நம்மைத் தடுத்து அறிவுறுத்தி சன்மார்க்கத்திற்

செலுத்தி நமக்கு மெஞ்ஞான உலகம் சிநேகமும் அஞ்ஞான வுலகம் பகையுமாகச் செய்வர். ஆனதால் அவர்களின் நட்பைப் பெறுவதற்கு காணவும் கிடைப்பது அரிதினுமரிதாம். இதனை,

"சமயம்வரி னிடித்துறைப்பர் தக்கவழி செலச்செய்வர்
இம்மையவர்தம் முலகுறவு மிருளுலகம் பகையுமாய்
அம்மையவறி வுறுத்துவா ரந்தோநூல் கற்றுணர்ந்தங்
கண்மைவுடையார் நட்பெவற்குங் காண்கிடைப்ப தரிதரிதே"

என மேலோரும் கூறினர்.

இத்தகைய பெரியாரது தெரிசனத்தை ஈஸ்வரானுக்ரகத்தால் ஒருவாறு கிடைக்கப்பெறின் பொருள் கொடுத்தும் வழிபட்டும் போற்றியும் அவரது சிநேகத்தைப் பெறவேண்டும். அங்ஙனம் அவ்வாறு பெறின் அவை தாம் பெற்ற செல்வங்கள் எவற்றிற்கும் தலையாகுமன்றோ. இவற்றை நம் பெரியாராகிய வள்ளுவரும்,

"மருவுக மாசற்றார் கேண்மை..........."

"தம்மிற் பெரியார் தமரா யொழுகுதல்
வன்மையு ளெல்லாந் தலை"

எனக் கூறினர்.

ஆத்மின் முத்தியை அடைவதற்குச் சிவபுண்ணியமே முதற்காரணமாகும். அவையின்றேல் தர்மஞ்செய்யாதவர்

பெரியாரைப்பேணார். பெரியாரைப் பேணாதவர் தவம்பெறார். தவம்பெறாதவர் தெய்வந் தொழார். தெய்வந் தொழாதவர் அதர்ம காரியங்களைச்செய்து பாவத்திற்காளாகி நரகத்துழல்வர். இதுபற்றியே சிவவாக்கியரும்,

"தர்மசிந்தை யாமளவுந் தவமறியாத் தன்மையாற்
கர்மசிந்தை வெயிலுழன்று கருத்தழிந்த கசடரே"

எனக் கூறினர். ஒருவனுக்குச் க்ஷேமத்தைக் கொடுப்பது புண்ணியமும் சிரமத்தைக் கொடுப்பது பாவமுமானதால் செய்யத்தக்கது புண்ணியமும் செய்யாது விடுக்கத்தக்கது பாவமுமாகும். அப்புண்ணியத்தைச் செய்வதும் தம்மால் இயன்றவரை ஓவாதுசெய்யவேண்டும். இவ்வுண்மையைத் தெய்வப் புலவரும்,

"செயற்பால தோறு மறனே யொருவற்
குயற்பால தோறும் பழி"

"சிறப்பீனுஞ் செல்வமு மீனு மறத்தினூஉங்
காக்கமெவ னோ வுயிற்கு"

"அறத்தினூஉங் காக்கமு மில்லை—யதனை
மறத்தலினூஉங் கில்லை கேடு"

"ஒல்லும் வகையா லறவினை யோவாதே
செல்லுவா யெல்லாஞ் செயல்"

என வற்புறுத்தி யருளினர்.

ஆகலின் நிகழும் சென்மத்தில் செல்வமுடையவர் யாவரும் நாம் இச்செல்வத்தைப் பெற்றது பூர்வபுண்ணியத்தால் என அறிந்து அப் புண்ணியத்தை இச் சென்மத்திலும் விடாது செய்தாலன்றோ இனிவரும் சென்மத்திலும் இன்பம் அடைதற் கியலுமென உணர்ந்து வறியார்க்கும் சிவபூசைக்கும் கற்றுணர்ந் தவராகிய சாது சங்கத்திற்கும் விரைந்து செய்யவேண்டும். இதனை,

"என்னுளு மொன்றுதங் கையுறப் பெற்றக்காற்
பின்னுவ தென்று பிடித்திரா—முன்னே
கொடுத்தா ருயப்போவர்........................"

என்பதே நன்குணர்த்திற்று. அவ்வாறு செய்யாதொழியின் அச் செல்வம் இருக்கும்போழ்தே நாம் ஒழிந்துவிடின் ஆங்குள்ள காதற்ற ஊசியும் நம்முடன் வாராதெனின் அச்செல்வத்தால் நமக்குப் பயன் என்னே. இது கருதியன்றோ பட்டினத்தடிகளும்,

"முற்றொடர்பிற் செய்த முறைமையால் வந்தசெல்வம்
இற்றைநாட் பெற்றோமென் றெண்ணாது பாழ்மனமே
அற்றவற்கு மீயாம லரன்பூசை யோராமற்
கற்றவற்கு மீயாமற் கண்மறந்து விட்டனையே"

"..........................................................
தீதுற்ற செல்வமுந் தேடிப் புதைத்த திரவியமுங்
காதற்ற ஊசியும் வாராது காணுங் கடைவழிக்கே"

என வாய்விட்டிரைந்தனர். ஆனதால் உலகத்தில் நமக்குப் பயன் தருவது யாதெனின், சிவனடியாரது சிநேகமும் சிவபெரு

மானிடத்தில் பக்தி பண்ணுவதுமே நமக்கு அழிவில்லாத நன்மையைத் தருவதாகும். இதனையன்றி நான்முகன் வகுத்த நமது குடிவாழ்க்கைக் கேதுவாகிய சுற்றத்தினரும், மனைவியும், செல்வமும் ஆகிய இவையெல்லாம் மண்பாண்டங்கள் தடியால் மொத்துண்டு சிதறியதுபோல அநித்தியமாகி அழிந்துவிடுமன்றோ. இவ்வுண்மையை உணர்ந்தே அறிவுடையார்கள் அதனைக் கருதார்கள் என்பதைப் பட்டினத்தடிகளும்,

"அடியா ருறவு மரன்பூசை நேசமு மன்பு மன்றிப்
படிமீதில் வேறு பயனுளதோ பங்கயன் வகுத்த
குடியான சுற்றமுந் தாரமும் வாழ்வுங் குயக் கலங்கள்
தடியா லடியுண்ட வாறொக்கு மென்றினஞ் சார்ந் திலரே"

எனவும் பிறவும் பன்முறை வற்புறுத்தியருளினர் ஆகவே யௌவனமும், சுகமும், செல்வமும், திறமையும் நிலையில்லாமையையும், துன்பம் தலைமேல் இருக்கின்றதென்பதையும் உணர்ந்து விபசாயிகள் இவ்வருஷத்தில் கிடைத்த தானியங்களில் அடுத்த வருஷத்தில் பயிர் செய்வதற்கு ஏதுவாக விதை வைத்திருப்பது போல நாமும் வீட்டுநெறிக்குறிய வித்தாகிய புண்ணியமுதலியவற்றைத்தவிராது, செயல்உள்ள போழ்தேசெய்வது சிறப்பாம். இக்கருத்தை,

"இளமையு நில்லாவா லின்பமும் நின்ற வல்ல
வளமையு மஃதேயால் வைகலுந் துன்ப வெள்ள
முளவென நினைந்தேசெல் லுங்கதிக் கென்று மென்றும்
விளைநில முழுவார்போல வித்துநீ செய்து கொண்மின்"

என்னும் இதனாலுணர்ந்து புண்ணியத்தைக் கடைப்பிடித்து

ஒழுகிப் பல சமயநெறிகளின் தன்மையையும் அவற்றுள் மேலாகிய உண்மை நெறி யாதெனவும் விசாரித்தறியவேண்டும்.

சிவபுண்ணியக் கட்டளை

முற்றிற்று.

உ

பரப்பிர்ம்மணே நம:

# மதாசாரக் கட்டளை.

மதமாவது இறைவனை வழிபடு மார்க்கமாகும். இதனையே மதமென்றும் மார்க்கமென்றும் நெறியென்றும் சமயமென்றும் சுருதிகள் கூறும். அவை உட்சமயம் 6, புறச்சமயம் 6 என விரியும். இவற்றுள்,

உட்சமயமாவது :- சைவம், பாசுபதம், வாமம், வைரவம், மாவிரதம், காளாமுகம், என்னும் இவைகளாகும்.

இவை 6-க்கு விபரம்:-

சைவ சமயி—சிவமென வழிபடல்.

பாசுபத சமயி—திருநீறுஞ் சடைமுடியுந் தரித்த மூர்த்தி [என வழிபடல்.

வாம சமயி—உமாதேவியை ஒரு பாகத்தில் உடையவரென [வழிபடல்.

வைரவ சமயி—தமருகமும் சிலம்புந்தரித்த மூர்த்தி என [வழிபடல்.

மாவிரதி—என்புமாலை தரித்தமூர்த்தி என வழிபடல்.

காளாமுகத்தன்—படிகமும் புத்ரதீபக மணியும் தரித்த [மூர்த்தி என வழிபடல்.

இனி, புறச்சமயமாவது:-உலோகாயதம், பௌத்தம், சமணம், மீமாஞ்சை, மாயாவாதம், பாஞ்சராத்ரம் என்னு மிவைகளாம்.

இவை 6-க்கு விபரம்:-

உலோகாயதம்—பிரபஞ்சம் கர்த்தாவன்றித் தானே தோன்றி [அழியுமென்பது.

பௌத்தம்—பௌத்தாசிரியரைக் கடவுள் என்பது.

சமணம—அருகன் என்ற தெய்வத்தை வணங்குவது. இதனை [ஆருகத சமய மென்பதுவும் உண்டு.

மீமாஞ்சை—பூர்வ மீமாஞ்சை, உத்தர மீமாஞ்சை என இரு [வகையாகும்.

மாயாவாதம்—உற்பத்தி நாசம் வருவதை யறியாமல் நான் [பிறக்கவுமில்லை இறக்கவுமில்லை எனப் பேசுவதாகும்.

பாஞ்சராத்ரம்—வைஷ்ணவர்கள் விஷ்ணுவையே பரமென்ப [தாகும்.

இவைகளை அன்றிப் புறப்புறச் சமயங்களாகிய அநேக மதங்களுமுள்வாம். இதற்குச் சான்றாகத் தாயுமானவரும் "சைவமுத லாமளவில் சமயமும் வகுத்து" எனக் கூறினர்.

ஆதலின், அநேக நதிகள் பிரவாகமாகிச் சமுத்திரத்தை நோக்கிச் செல்லுமிடத்து சமுத்திரத்திற்கு நேராகிய மார்க்கத்திற் பிரவேசித்த நதியே அதி துரிதமாய்ச் சமுத்திரத்தை அடைந்துவிடும். மற்றைய நதி யெல்லாம் தான் போவதற்கு வழியின்றித் தடைப்பட்டு நின்று விடும். ஆனதால் ஆகம

நெறிகளாகிய துவைதசமயிகள் அனைவரும் ஞானநெறியாகிய அத்வைத சமயத்தைத் தழுவி நின்றே கதிபெறவேண்டும். இவ்வத்வைத நெறியே ஆச்சாரியரனுக்கிரகத்தால் அறிவதாகியதும் எச்சமயங்களுக்கும் மேலாகியதுமாகிய உட்சமயமாகும். இதனை,

"சட்சமய பேதங்கள் தான்வகுத்துப் பின்னுமொரு
உட்சமய முண்டென் றுரைத்தனையே பூரணமே"

எனப் பட்டினத்தடிகளும்,

"சமயங் கடந்த மோன சமரசம்"

எனத் தாயுமானவரும் கூறினர்.

இத்தகைய மேன்மையுற்ற மோன வழியை உணர்ந்தவர் யாவரோ அவரே நன்மையுடையவரும் பெரியோருமாவர். அவரது பரம்பரையே, நன்மையான பரம்பரையாம். அப்பரம்பரையே உயரிய புகழையுடையதும் சொல்லுதற் கரிதாகிய மோக்ஷ வழியை உணர்ந்ததுமாகும். இதனை,

"மனத்தாலும் வாக்காலும் மன்னவொண்ணு மோன
இனத்தாரே நல்ல இனத்தார்—கனத்தபுகழ்
கொண்டவரு மன்னவரே கூறரிய முத்திநெறி
கண்டவரு மன்னவரே காண்"

என்னும் தாயுமானரது திருமறை வாக்கியமே நன்குணர்த்துகின்றது. இவ்வுண்மையை அறியாது மதக்கிரந்திகளாகிய சிலர் தாந்தாமனுஷ்டிக்கும் ஆகம நெறிகளாகிய துவைத சமயங்களும், அநாகம நெறிகளாகிய புறச் சமயங்களுமே கதிக்குரியதெனக்

கருதி அத்வைத நெறியாகிய மோன வழியை இகழ்வர். இவரடையுங் கதி அபரகதி யாகுமேயன்றிப் பரகதி யின்றும். இதற்குச் சான்றாக,

"சமய வாதிகள் தத்தம் மதங்களி
லமைவ தாகவ ரற்றி மலைந்தனர்"

"புத்தர் முதலாய புல்லறிவிற் பல்சமயந்
தத்தம் மதங்களிற் றட்டுளுப்புப் பட்டுநிற்பர்"

என வாதவூரடிகளும்,

"கருமமான பிறப்பற வொருகதி
காணு தெய்த்துத் தடுமாறுங்
கலககாரண துற்குண சமயிகள்"

என அருணகிரிநாதருங் கூறினர்.

ஆனதால் ஞானத்தையடைதற்கு ஏதுவாவது, ஞான நூலை ஆராய்வதும், ஞானவழி யுணர்ந்தோர்களை வழிபடுவதும், அவரது உபதேச மொழிகளால் பரம ரகசியமாகிய உட்சமய மென்னும் அத்வைத அபரோக்ஷ ஞான நிலையை அறிவதுமே யாம். இதனை நமது சந்தப் பாவலரவர்களும்,

"சமய பத்திவிர் தாத்தனைநினை யாதே
சரண பத்மசி வார்ச்சனைதனை நாடி
அமைய சற்குரு சாத்திரமொழி நூலால்
அருளெ னக்கினி மேற்றுணைதரு வாயே"

என விளக்கியருளினர்.

இனி, அந்த அபரோக்ஷ ஞான நிலையில் விளங்குவதும் பிறப்பிறப்பைக் கடக்க விரும்புவோர் உபாசிக்கத்தக்கதுமாகிய தெய்வம் யாவரெனின்: தமதன்பர்களின் பக்திக்கிரங்கி அபயாஸ்தங் கொடுத்து ஆனந்தத் தாண்டவம் புரிபவரும் என்றும் அழியாதவரும் பரமபதியுமாகிய நடராஜமூர்த்தியேயாவர். அவரே யாவரும் உபாசிக்கத் தக்கவராவர்.

அவர் சர்வ ஆன்மாக்களிடத்தும் அந்தர்யாமியாக நின்று அவரவர் கன்மத்திற்குத் தகுந்த போகங்களை ஊட்டுவித்தல், உறங்குவித்தல், மூட்டுவித்தல், முயங்குவித்தல், காட்டுவித்தல், ஆட்டுவித்தல் முதலியவற்றை செய்வர். இதனை,

"ஊட்டுவிப்பானு முறங்குவிப்பானு மிங்
கொன்றோ டொன்றை
மூட்டுவிப்பானு முயங்குவிப்பானு
முயன்ற வினை
காட்டுவிப்பானு மிருவினைப்பாசக்
கயிற்றின் வழி
யாட்டுவிப்பானு மொருவனுண் டேதில்லை
யம்பலத்தே"

என்னும் பட்டினத்தடிகள் திருவாக்கே நன்குணர்த்துகின்றது. இந்த நடராஜமூர்த்தியின் அநுக்கிரகத்தால் சிருஷ்டி, ஸ்திதி முதலியவற்றைச் செய்பவரும் அடிக்கடி பிறவியெடுப்பவருமாகிய சிறு தேவர்களைப் பரமபதியாகச் சிந்திக்கின் அப்படிச் சிந்தித்த சீவர்களின் அஞ்ஞானம் நீங்காது ஒழியா

பிறவியில் உழன்றுதவிப்பர். இது கருதியே நம் தாயுமானப் பெருந்தகையும்,

“வேண்டுவ படைத்தாய் நந்தை விதிப்படி புரந்தா னத்தைக்
காண்டக வழித்தான் முக்கட் கடவுடா னிவைய வாற்றால்
'ஆண்டவ னெவனோ வென்ன வறிகிலா தகில நீயே
ஈண்டிய வல்ல நீர வெம்மனோர்க் கியம்பு கண்டாய்

கண்டன வல்ல வென்றே கழித்திடு மிறுதிக் கண்ணே
கொண்டது பரமா னந்தக் கோதிலா முத்தி யத்தாற்
பண்டயிற் படைப்புங் காப்பும் பறந்தன மாயை யோடே
வெண்டலை விழிகை காலில் விளங்கிட நின்றான் யாவன்

விளங்கவெண் ணீறு பூசி விரிசடைக் கங்கை தாங்கித்
துளங்குநன் னுதற்கண் டோன்றச் சுழல்வழி நெடுமூச் சாகக்
களங்கமி லுருவந் தானே ககனமாய்ப் பொலியப் பூமி
வளர்ந்தது தா னென்ன வுள்ள மன்றென மறையொன் றின்றி

மறைமுழக் கொலிப்பத் தானே வரதமோ டபயக் கைகள்
முறைமையி னோங்க நாத முரசெனக் கரங்க வெங்கும்
குறைவிலா வண நிறைந்து கோதிலா நடனஞ் செய்வான்
இறையவ னெனலா மியாற்கு மிதயசம் மதமீ தல்லால்

அல்லலாந் தொழில் படைத்தே அடிக்கடி யுரு வெடுத்தே
மல்லன்மா ஞாலங் காக்க வருபவர் கடவு ளென்னிற்
றொல்லையாம் பிறவி வேலை தொலைந்திடா திரு ணீங்காது
நல்லது மாயை தானு நானென வந்து நிற்கும்”

என வற்புறுத்தியருளினர். மேலும்,

"சொல்லாண்ட சுருதிப்பொருள் சோதித்த
தூய்மனத் தொண்டருள்ளீர்
சில்லாண்டிற் சிதையுஞ் சிலதேவர்
சிறுநெறி சேராமே
வில்லாண்ட கனகத் திரண்மேரு
விடங்கண் விடைப்பாகன்
பல்லாண் டென்னும் பதங்கடந் தானுக்கே
பல்லாண்டு கூறுதுமே"

எனப் பல்லாண்டார்கூறியது மிதுபற்றியே யாகும்.

அவை நிற்க, ஆகம நெறிகளும் அநுகமநெறிகளுமாகிய துவைத சமயங்கள் அனைத்தும் இறைவனைத் துவைத பரோக்ஷமாகத்தான் கூறும். ஏனெனின் துவைதபரோக்ஷமாகிய சரியை, கிரியை இரண்டும் எம்மதங்களிலும் அமைந்துள்ளவாம். இவற்றை யாவரும் அநுஷ்டிக்கவுங் கூடும். ஆனால் அத்வைதத்திற்றுவைத அபரோக்ஷமாகிய யோகம், ஞானமிரண்டும் அநுபவ சித்தாந்தத்திற்கே உரியவையாகும். இவை யாவருக்கும் புலப்படுவதரிதாகும். இதனை,

"ஒத்துநின்ற சரியையொடு கிரியை ரெண்டும்
உலகாதி செய்வதப்பா நன்றாய்க் கேளு
பத்திநின்ற யோகமொடு ஞானம் ரெண்டும்
பாங்காக சித்தருக்கு அடுத்தவாறு"

என்பதனாலுணரக் கிடக்கின்றது.

ஆனதால் எம்மதஸ்தர்களாயினும் ஆந்தர அபரோக்ஷ ஞானத்தை அடையவிரும்பினால் நடராஜமூர்த்தியே மெய்ப் பொருளெனவும் அவரை அடைதற்குரிய நெறி அநுபவ சித்தாந்த நெறியே என்பதையுமுணர்ந்து சித்தாந்தமார்க்கத்தால் வழிபடுவோர்க்குச் சிவதெரிசனமுண்டாகும். இதனை,

"முத்தாந்த வீதி முளரிதொழு மன்பருக்கு
சித்தாந்த வீதிவருந் தேவே பராபரமே"

என்பதனாலுணர்ந்து அவ்வநுபவசித்தாந்த நெறியில் அபரோக்ஷ மாக அறியும் தத்துவங்கள் யாதென விசாரித்தறிய வேண்டும்.

மதாசாரக் கட்டளை
முற்றிற்று.

பரப்பிர்ம்மணே நம:

# சித்தாந்த தத்துவக் கட்டளை.

சரீரமானது அவரவர் கைகளால் எட்டுச் சாண் நீளமும், நாலு சாண் பருமனுமுள்ளது. இதில் தொண்ணூற்றாறு தத்துவங்களடங்கியிருக்கின்றன.

அவையாதெனின்: அகக்கருவி 36. புறக்கருவி 60. இவற்றுள்,

## அகக்கருவி 36-க்கு விபரம்.

| | |
|---|---|
| பூதம் | 5 |
| பொறி | 5 |
| புலன் | 5 |
| கர்மேந்திரியம் | 5 |
| கரணம் | 4 |
| காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை என வித்தியாதத்துவம் | 7 |
| சுத்த வித்தை, ஈஸ்வரம், சாதாக்கியம், சத்தி, சிவம், என சிவதத்துவம் | 5 |
| ஆக அகக்கருவி | 36 |

## புறக்கருவி 60-க்கு விபரம்.

| | |
|---|---|
| பிருதிவியின் கூறாகிய தோல், எலும்பு, நரம்பு, தசை, மயிர், என | 5 |
| அப்புவின் கூறாகிய நீர், உதிரம், மச்சை, மேதை, சுக்கிலம் என | 5 |

தேயுவின் கூறாகிய பசி,

த்திரை, பயம், மதுனம், சோம்பல் என 5

ாயுவின் கூறுகிய ஓடல், -த்தல், நிற்றல், இருத் ல், கிடத்தல் என 5

காயத்தின் கூறுகிய ாமம், குரோதம், லாபம், மதம், மாச் ர்யம் என 5

ஆ பூதகாரியம் 25

நதிவியின் வழித்தான டை, பிங்கலை, சுழிமுனை, ங்தாரி, அத்தி, அலம் டை, சிங்குவை, புருடன், கு, சங்கினி என நாடிகள் 10

ாயுவின் வழித்தான யானன், பிராணன், பானன், சமானன், தானன், நாகன், கூர்மன், ரிகரன், தேவதத்தன், னஞ்செயன் என வாயுக் ள் 10

ஆகாயத்தின் வழித்தான ஹார்த்த வேடனை, புத்ர வேடனை, உலகேடனை என ஏடனை 3

வாக்காதியின் வழித்தான வசனம், கமனம், தானம், விசர்க்கம், ஆனந்தம் என வசனாதிகள் 5

பிரகிருதியின் வழித்தான சாத்வீகம், இராசதம், தாமதம் எனக் குணம் 3

விந்துவின் வழித்தான சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என வாக்கு 4

ஆ புறக்கருவி 60

## அகக்கருவி 36-ல்.

பூதம் 5-க்கும் தொழில்,

பிருதிவுக்கு,
வடிவு—சதுர்க்கோணம்.
நிறம்—பொன்மை

குணம்—கடினம்
சுபாவம்—கிடத்தல்
தொழில்—பொருத்தல்
குறி—வச்சிரம்

அப்புவுக்கு,
வடிவு—பிறைக்கோணம்
நிறம்—வெண்மை
குணம்—நெகிழ்ச்சி
சுபாவம்—பார்த்தல்
தொழில்—கட்டுண்டல்
குறி—கோகநகம்

தேயுவுக்கு,
வடிவு—திரிகோணம்.
நிறம்—செம்மை
குணம்—சுட்டொன்றுவித்தல்
சுபாவம்—வவ்வுதல்
தொழில்—உலர்த்தல்
குறி—சுவர்த்திகம்

வாயுவுக்கு,
வடிவு—அறுகோணம்
நிறம்—கருப்பு
குணம்—சலித்துத் திரட்டல்
சுபாவம்—நிறைத்தல்
தொழில்—விம்முதல்
குறி—அறுபுள்ளி

ஆகாயத்திற்கு,
வடிவு-வட்டம்
நிறம்—கனகம்
குணம்—இடங்கொடுத்தல்
சுபாவம்—நிற்றல்
தொழில்—போக்குதல்
குறி—அமுதவிந்து

ஆக பூதமைந்தின் தொழிலுங் காண்க.

பொறி 5-க்கும் தொழில்,

சுரோத்ரம்—ஆகாயத்தினிடமாக நின்று செவியைப் பொருந்திச் சத்தத்தை யறியும்.

தொக்கு—வாயுவினிடமாக நின்று சரீரத்தைப் பொருந்திப் பரிசத்தை யறியும்.

சட்சு—அக்கினியினிடமாக நின்று கண்ணைப் பொருந்தி உருவத்தை யறியும்.

சிங்ஙுவை—அப்புவினிடமாக நின்று நாவைப் பொருந்தி ரசத்தை யறியும்.

ஆக்ருணம்—பிருதிவியி
டமாக நின்று மூக்கைப்
பாருந்திக் கந்தத்தை
றியும்.

ஆகப் பொறி ஐந்தின்
தாழிலுங் காண்க.

புலன் 5-க்கும் தொழில்,
பொறி 5-க்கும் விடையமா
ருக்கும்.

கர்மேந்திரியம் 5-க்கும்
தொழில்,

வாக்கு—ஆகாயத்தினிட
ாக நின்று நாவைப்
பாருந்தி வசனிக்கும்.

பாதம்— வாயுவினிடமாக
ன்று காலைப் பொருந்திக்
மனிக்கும்.

பாணி- அக்கினியினிடமாக
ன்று கையைப்பொருந்தி
டுதல் யேற்றல் செய்யும்.

பாயுரு—அப்புவினிடமாக
ன்று குதத்தையுங், குய்யத்
தையும் பொருந்தி மலஜல
விசர்ச்சனம் பண்ணும்.

உபஸ்தம் — பிருதிவினிட
மாக நின்று குய்யத்தைப்
பொருந்தி சுக்கிலத்தைக்
கழிக்கும்.

ஆகக் கர்மேந்திரியமைந்தின்
றொழிலுங் காண்க.

கரணம் நான்கின் றொழில்,
மனம்—பற்றும்
புத்தி—நிச்சயிக்கும்
அகங்காரம் — கொண்டெ
ழுப்பும்
சித்தம் செய்துமுடிக்கும்
ஆகரணம் நான்கின் றொழி
லுங் கண்டுகொள்க.

## வித்தியா தத்துவம் ஏழின்றொழில்,

காலம்—செல்காலமான எல்
லையும், நிகழ்காலமானபலமும்,
எதிர்காலமான புதுமையும்
ஆ மூன்று விதமாகும்.

---

குறிப்பு:— அந்தக்கரணம் ஐந்தில் உள்ளத்தை மனதிலடக்கி நான்காகச் சொல்லியிருக்கிறது.

நியதி—அரசன் ஆணையைப் போல கர்மபலத்தை உள்ளவும் நிறுத்தும்.

கலை—ஆணவத்தைச் சிறிது நீக்கி ஆன்மாவுக்கு கிரியை யெழுப்பும்.

வித்தை—ஆன்மாவுக்கு ஞானத்தை யெழுப்பும்.

அராகம்—ஆன்மாவுக்கு இச்சையை யெழுப்பும்.

ஆக கலையாதி பஞ்சகஞ் சுகத்துடனே கூடிப் புலனுகருமிடமே புருடனும்.

மாயை—பிரகிருதிகுணரூபமாய்நின்று பிரபஞ்சத்தை மெய்யென ருசிப்பித்துப் பொருந்தினதில் அழுத்தும்.

ஆக வித்தியாதத்துவம் ஏழின் றொழிலுங் காண்க.

சிவ தத்துவம் ஐந்தின் றொழில்,

சுத்தவித்தை-ஞானமேறிக் கிரியை குறைந்திருக்கும்.

ஈஸ்வரதத்துவம்—கிரியையேறி ஞானங் குறைந்திருக்கும்.

சாதாக்கிய தத்துவம்-ஞானமுங்கிரியையுமொத்திருக்கும்.

சத்தி தத்துவம்—கிரியையாயிருக்கும்.

சிவ தத்துவம்—ஞானமாயிருக்கும்.

இப்படி சிவதத்துவம் ஐந்தின் றொழிலுங் காண்க.

ஆக அகக்கருவி முப்பத்தாறின் றொழிலுங் காண்க.

புறக்கருவி அறுபதின் றொழில்.

---

பூதனீமந்திற் பிருதிவியின் கூறுஇய,

தோல்—வற்கென்னும்

எலும்பு—உறக்கும்

நரம்பு—கதித்தோடும்

தசை—முற்றும்

மயிர்—வளரும்

அப்புவின் கூறுகிய,

நீர்—விழும்
உதிரம்—பரப்பும்
மச்சை—நிறைக்கும்
மேதை-மெத்தென்றிருக்கும்
சுக்கிலம்—வர்த்திக்கும்.

தேயுவின் கூறுகிய,

பசி—தாபிக்கும்
நித்திரை—மயக்கும்
பயம்—அஞ்சுவிக்கும்
மைதுனம்—சங்கமஞ் செலுத் [தும்
சோம்பல்—முறிப்பிக்கும்.

வாயுவின் கூறுகிய,

ஓடல்—விரைவிக்கும்
நடத்தல்—நடப்பிக்கும்
நிற்றல்—நிற்பிக்கும்
இருத்தல்—அழுத்துவிக்கும்
கிடத்தல்—போடுவிக்கும்.

ஆகாயத்தின் கூறுகிய,

காமம்—மோகிக்கும்
குரோதம்—கோபிக்கும்
லோபம்—பிடிபாடு செய்யும்
மதம்—அகங்கரிக்கும்
மாச்சர்யம்—உதட்டில் நகைப்பும் உட்பகையுமாயிருக்கும்.

ஆ. பூதகாரியம் 25.

பிருதிவியின் வழித்தான நாடிகளின் றொழில்.

இடை—வலதுகாற் பெருவிரலிலிருந்து கத்தரி மாறலாக இடது நாசியைப் பற்றி நிற்கும்.

பிங்கலை—இடதுகாற் பெருவிரலிலிருந்து கத்தரி மாறலாக வலது நாசியைப் பற்றி நிற்கும்.

சுழிமுனை — மூலாதாரத்திலிருந்து சிரசூடே நடு நாடியாய் நிற்கும். இதனைச் சித்திர நாடி யெனவுஞ் சொல்லுவர். இதன் வழியாக யோகதாரணை செய்து அமுத பானம் பண்ணுவார்

பெரியோர்கள். இதனைப் பதஞ்சலி முனிவர் ஞானத் திருப்புகழில்,

"புசியமு துஞ்சிர சூடே நாடியி
லொழுகிவ ரும்படி யாமே தா [ரணை
புரிய மிதம்பெற வே தான் [ரேசக
—புணர்வாகும்"

என்றனர்.

காந்தாரி—கண்ணிலேநிற்கும்.

அத்தி—உடலெங்கும் நிற்கும்.

அலம்புடை—செவியிலே நிற்கும்.

சிங்குவை—தாலுவிலே நிற்கும்.

புருடன்—பாதத்தில் நிற்கும்.

சங்கினி—கழுத்திலே நிற்கும்.

குகு—மார்பிலே நிற்கும்.

ஆ தச நாடிகளின் றொழிலுங் காண்க.

வாயுவின் வழித்தான
தசவாயுவின் றொழில்,

வியானன் — சர்வாங்கமும் வியாபித்திருந்து பரிசத்தை யறியும்.

பிராணன்—மூலாதாரத்திற் றோன்றி இடை, பிங்கலை, யாலேறி நாசியின் வழியாகப் பனிரெண்டங்குலம் வெளியே போய் நாலங்குலம் போக வெட்டங்குலம் மீண்டும் உள்ளே புகும். இப்படி ஒவ்வொரு நாசியிலும் இரண்டரை நாழிகைக்கு ஒரு நாடியாக மாறி மாறி நடக்கும். சுவாசம் நாளொன்றுக்கு 21600. இவற்றுள் 7200 சுவாசம் வெளியே செல்லும். 14400 சுவாசம் உள்ளே புகுமென்றறிக.

அபானன் — குதத்தையும் குய்யத்தையும் பற்றி நின்று மலஜல விசர்ச்சனம் பண்ணும்.

சமானன்—உண்ட அன்ன ரசங்களை எழுபத்தீராயிரம் நாடிகளிலுங் கலப்பிக்கும்.

உதானன்—உண்ட அன்ன பானாதிகளைக் கடையும்.

நாகன்—விக்கல், க்கலை யுண்டாக்கும்.

கூர்மன்—இமைத்து விழிப்பிக்கும்.

கிரிகரன் — குருகுருத்துத் தும்மச்செய்யும்.

தேவதத்தன் -ஓடுவித்தல், உலாவுவித்தல் செய்யும்.

தனஞ்சயன்—வீங்கச் செய்யும்.

இப்படி தசவாயுவின் றொழிலுங் காண்க.

வடனை 3-ன் றொழில்,

ஹர்த்த வேடனை—பொருளால் வரும் பிணக்கு

புத்திர வேடனை—புத்திராதிகளால் வரும் பிணக்கு

உலகேடனை— உலகவிஷயங்களால் வரும் சங்கற்ப விகற்பப் பிணக்குக்களாம்.

வசனுதிகள் ஐந்தின் றொழில், வாக்காதி ஐந்திற்கும் விடையமாகவிருக்கும்.

முக்குணங்களின் றொழில்,

சாத்வீகம்—அருள், ஐம்பொறியடக்கல், ஞானம், தவம், பொறை, மேன்மை, வாய்மை, மோனம் ஆகிய எண்குணமுடையது.

இராசதம்—ஊக்கம்,வீரம், கோபம், தருமம், தானம், தவம், கல்வி, கேள்வியாகிய எண்குணமுடையது.

தாமதம்—ஒழுக்கமின்மை, காமம், கோபம், கொலை, சோம்பல், நீதிவழு, நெடுந்துயில், பேருண்டி ஆகிய எண்குணமுடையது.

முக்குணங்களின் றொழிலுங் காண்க.

வாக்கு நான்கின் றொழில்.

சூக்மையாவது—ஜோதியாய்,

நேர்மையாய் ஒன்று சொல்ல வந்தவிடத்தில் துரியத்தில் நாதமாய்த் தோன்றுவது.

பைசந்தியாவது — சுழுத்தி ஸ்தானத்திற் சூக்குமையிற் றோன்றிய நாதம் உதான வாயுவினாலே சிதறப்பட்டு மயில் முட்டையிற் பஞ்ச வர்ணமுமடங்கி இருப்பது போல் இனிச் சொல்லும் வசனத்திற்கு அக்கர சொரூபம் பிறக்கக் கருக்கொண்டிருப்பது.

மத்திமையாவது— உதான வாயுவினாற் சிதறப்பட்ட நாதம் சொற்பன ஸ்தானத்திலே பிராணவாய்வுடனே சேர்ந்து அக்கரத்தினது சொரூபங்களைப் புத்தியிலே ஒழுங்குபட நிறுத்திச் செவியிற் கேளாமல் உள்ளே கேட்கத்தக்க ஒலியாய்க் கண்டத்திலே முழங்கா நிற்பது.

வைகரியாவது — நாக்கு, அண்ணம், உதடு, பல், மூக்கு ஆகிய இவ்வைந்திடத்திலும் புறப்பட்டுச் செவியிற்கேட்க வசனிப்பது. இப்படி வாக்கு நான்கின்றொழிலுங் காண்க.

ஆ புறக்கருவி அறுபதின் றொழிலுங் காண்க.

இந்த அகக்கருவி முப்பத்தாறு, புறக்கருவி அறுபது

ஆக 96-ம் பிண்டத் தத்துவங்களாகும்.

இப்படி 96தத்துவங்களுடைய சரீரத்திற் சரீரியாகிய ஜீவன் வசிக்கும். இந்தச்சரீரி சுகதுக்கங்களை அனுபவிப்பதற்குக் காரணமாகிய வினை 2, மலம் 3, தோஷம் 3, கோசம் 5, சயம் 5 இவைகளுக்கு விபரங்கள்.

## வினை.

நல்வினை, தீவினையெனுமிரண்டாம். இவற்றுள் நல்வினை

யால் சுகமும், தீவினையால் துக்கமும் உண்டாகும்.

## மலம்.

ஆணவம், கர்மம், மாயை என மூன்றும். இவற்றுள் ஆணவமாவது ஆன்மாவுக்கு அகங்காரத்தைக் கொடுத்து சரீரத்தைத் தானென்றபிமானித்துநின்று கர்மங்களைச் செய்விப்பது.

## கர்மம்.

சஞ்சிதம், பிராரத்வம், ஆகாமியம் என மூன்றும். இவற்றுள் சஞ்சிதம் சீவர்களுக்கு ஜெனனமுண்டாவதற்குக் காரணமாய் நெற்களஞ்சியம் போன்றிருப்பது.

## பிராரத்வம்

முன்னுள்ள சஞ்சிதவினையை அனுபவித்தற் கேதுவாகஜ் ஜெனனமாகிய ஜீவர்களுக்குச் சஞ்சிதக் களஞ்சியத்தை நியதிப்ப்டி ரக்ஷகாளிக்க ஜீவர்களனுபவிப்பது பிராரத்வமாகும்.

## ஆகாமியம்.

பிராரத்வம் நுகருமிடத்து "உண்பதுநாழி உடுப்பது நான்கு முழம் எண்பது கோடி நினைந்தெண்ணுவன" என்னும் முதுமொழிக்கிலக்காய் நினைப்பது ஆகாமியமாகும். இந்த ஆகாமியத்தை பிராரத்வம் நுகருமிடத்து வரும் புண்ணிய பாவங்களாகிய சஞ்சிதத்திற்குத் தகுந்தாற்போற் நினைத்தாற் கைகூடும். இல்லையாகிற் கைகூடாவாம். ஏனெனின் ஒருவன் செய்வதெல்லாம் கிர்த்தியங்களைச்செய்து சுவர்க்காதிபோகம் வேண்டினல் இடைக்குமோ கிடைக்காது. ஒருவன் அகிர்த்தியங்களைச்செய்து

நரகாதி போகம் வேண்டினால் கிடைக்குமோ அதுவும் கிடைக்காது. மேலும், பிராரத்வத்தால் வருஞ் சஞ்சிதத்தையும் ஆகாமியத்தால் வரும் சஞ்சிதத்தையும் சீர்தூக்கின், பிராரத்வத்தால் வரும் சஞ்சித கர்மமே வலியுடையதாகும். ஆகாமியத்தால்வரும் சஞ்சிதகர்மம் மெலிவுடையதாகும். இப்படி வலுவும் மெலிவுமாவதற்குக் காரணம் யாதென்னின், பிராரத்வகர்மம் செய்கையால் வருவதும் ஆகாமியகர்மம் நினைவால் வருவதுமான்றால் வலுவும் மெலிவும் ஆயிற்றெனவறிக. இப்படிச் செய்கையால் வரும் வலியுடைக்கர்மமாகிய பிராரத்வகர்மத்தை அனுசரித்தே ஆகாமிய கர்மம் சித்தியாகும்.

ஆகவே, அதர்மமுதலாகிய அகிர்த்தியங்கள் நேர்ந்தகாலத்து மன முதலியன வேறுபடவும், தர்ம முதலாகிய கிர்த்தியங்கள் நேர்ந்தகாலத்து மனம்வாக்குக்காய மூன்றும் ஒத்துச்செய்யவும் வேண்டும். இதனை,

"தலைதலை சூலங் கடுங்கனல் கண்டைகட் டங்கங் கொடி
சிலையிவை யேந்திய வெண்டோட்சிவற்கு மனஞ்சொற் செய்கை
நிலைபிழை யாதுகுற் றேவல்செய் தார்குன்ற மேரு வென்னு
மலைபிழை யாரென்ப ரால‌றிந் தோர்களிம் மாநிலத்தே"

எனுமிதனாலறிக.

## மாயை.

சீவர்களை மயக்கிப் பிரபஞ்சத்தை மெய்யென ருசிப்பித்து வைப்பது.

## தோஷ மூன்றுக்கு விபரம்.

வாதம், பித்தம், சிலேத்பனம் என மூன்றும். இவற்றுள்,

வாதம்—வாயுவின் கோபம்
பித்தம்—அக்கினியின் கோபம்
சிலேத்பனம்—அப்புவின் கோபம்

இவை மூன்றின் கோபத்தாலும் சகல வியாதியுமுண்டாகும்.

## கோசம் ஐந்திற்கு விபரம்.

அன்னமயகோசம்
பிராணமயகோசம்
மனோமயகோசம்
விஞ்ஞானமயகோசம்
ஆனந்தமயகோசம்

இவற்றுள்,

அன்னமயகோசம்—சட்பாவ விகாரமாய்த் தோற்றப்பட்ட தூலதேகம்.

பிராணமயகோசம்—பிராணனுங் கர்மேந்திரியங்களும் கூடி நிற்பது.

மனோமயகோசம்—மனதும், ஞானேந்திரியங்களுங் கூடிநிற்பது.

விஞ்ஞானமயகோசம் — புத்தியும், ஞானேந்திரியங்களுங் கூடிநிற்பது.

ஆனந்தமயகோசம்—கர்மேந்திரியங்களும், அகங்காரமும்,

சித்தமும் கலந்துநின்று சுகத்தை அனுபவிப்பது. ஆக கோசம் ஐந்தின் விபரமும் காண்க.

## சயம் ஐந்திற்கும் விபரம்.

அமர்வாசயம்
பகிர்வாசயம்
ஜலவாசயம்
மலவாசயம்
சுக்கில்வாசயம்

இவற்றுள்,

அமர்வாசயம்—உண்ட அன்னம் அமருமிடம்.
பகிர்வாசயம்—அன்னம் பகிருமிடம்
ஜலவாசயம்—ஜலக்குழியிறங்குமிடம்
மலவாசயம்—மலக்குழி யிறங்குமிடம்
சுக்கிலவாசயம்—சுக்கிலம் பிரியுமிடம். ஆக சயம் ஐந்தின் விபரமும் காண்க.

## அண்டத் தத்துவங்களாவன.

| | |
|---|---|
| ஆதாரம் | 6 |
| அவஸ்தை | 5 |
| மண்டலம் | 3 |
| விந்து நாதம் | 2 |

இவற்றுள், ஆதாரம் 6-க்கு விபரம்.

மூலாதாரம்
சுவாதிஷ்டானம்

மணிபூரகம்
அனாகதம்
விசுத்தி
ஆஞ்ஞை

இதில், மூலாதாரம் குதத்திற்கும்,குய்யத்திற்கும் மத்தியில் திரிகோணமாய் அதனுள் குண்டலிவட்டமாய் வட்டத்தின் மேலே நாலிதழ்க்கமலமிருக்கும். அதில் ஓங்கார எழுத்துநிற்கும் அதில் விக்னேஸ்வரரும் வல்லபைசத்தியு மெழுந்தருளி யிருப்பார்கள். இதிற் குண்டலிசத்தி பாம்பின் வடிவமாய் மூலாதாரத்தில் வாலும், சுழிமுனை வாயிலிற் சிரசுமாகவைத்திருக்கும். அதை எழுப்பவேண்டின் பாம்பின் வாலைப்பிடித்தால் தலையை எவ்விதந் தூக்குமோ அதுபோல் குண்டலிசத்தியின் வாலைப் பிடித்து எழுப்பவேண்டும். அது சற்குரு கடாக்ஷம் பெறுதவற் கெளிதன்று. மேலும் குண்டலசத்தி பாம்பின் வடிவமென்பதை தாயுமானவர்,

"குத்திரமெய்ப் புற்றகத்துக் குண்டலிப்பாம் பொன்றுட்டுஞ்
சித்தனையென் கண்ணுற் றெரிசிப்ப தென்றுளோ"

எனக் கூறினர்.

அது பச்சைநிறமுள்ளது. அந்த நாலிதழிலும் நிற்கும் அக்ஷரங்களை இதனடியில்வரும் மூலாதாரச்சக்கரத்திற் காண்க.

## மூலாதாரச் சக்கரம்.




இதற்குத் திருமந்திரம்

"மாமலர் நாலையும் வட்டத்தின் மேலிடு
மாமலர் நாலினும் வவ்வாதி சவ்விடு
மாமலர் நாலிலே வட்டத்தினுள்ளே
ஓமென விநாயகனுலாவி நின்றானே"

"ஏருவிடு வாசற் கிருவிரன் மேலே
கருவிடு வாசற் கிருவிரல் கீழே
உருவிடு ஜோதியு மங்கேயு தித்தன
திருவுடை யாரிது சேர்ந்தறிவாரே".

## சுவாதிஷ்டானம்.

மூலாதாரத்திற்கு இரண்டுவிரற்கடைக்குமேல் வீணாத்தண்டின் அடியிலும், லிங்க பீடத்திற்கு நேரிலும் நாற்கோணமாய் அதனுள் ஆறிதழ்க்கமலமிருக்கும். அதில் நகார எழுத்து நிற்கும். அதிற் பிர்மாவும், சரஸ்வதியும் எழுந்தருளியிருப்பார்கள். இது பிருதிவியின் கூறு, பொன்னிறம். அந்த ஆறிதழிலுமுள்ள அக்ஷரங்களை இதற்கடியில்வரும் சுவாதிஷ்டானச் சக்கரத்திற் காண்க.

## சுவாதிஷ்டானச் சக்கரம்.



## மணிபூரகம்.

சுவாதிஷ்டானத்திற்கு எட்டுவிரற்கடைக்குமேல் நாபி ஸ்தானத்தில் ஏழாம்பிறைக்கிலக்காயிருக்கும். அதனுட் பத்திதழ்க் கமலமிருக்கும். அதில் மகார வெழுத்து நிற்கும் அதில் மஹாவிஷ்ணுவும், மஹாலக்ஷ்மியும் எழுந்தருளி யிருப்பார்கள். இது அப்பு, வெண்மைநிறம். அந்தப் பத்திதழிலுமுள்ள அக்ஷரங்களை இதற்கடியில் வரும் மணிபூரகச் சக்கரத்திற் காண்க.

## மணிபூரகச் சக்கரம்.



## அனாகதம்.

மணிபூரகத்திற்குப் பத்து விரற்கடைக்குமேல் இருதயத்தில் திரிகோணமாய் அதனுட் பனிரண்டிதழ்க்கமலமிருக்கும். அதில் சிகாரவெழுத்து நிற்கும் அதில் ருத்திரனும், ருத்திரியும் எழுந்தருளி யிருப்பார்கள். இது தேயுவு, செம்மை நிறம். இந்தப் பனிரண்டிதழிலுமுள்ள அக்ஷரங்களை இதற்கடியில்வரும் அனாகதச் சக்கரத்திற் காண்க.

### அனாகதச் சக்கரம்.



## விசுத்தி.

அனாகதத்திற்குப் பத்து விரற்கடைக்குமேல் கண்டத்தில் அறுகோணமாய் அதனுட் பதினாறிதழ்க்கமலமிருக்கும். அதில் வகார எழுத்து நிற்கும் அதில் மஹேஸ்வரனும், மஹேஸ்வரியும் எழுந்தருளி யிருப்பார்கள். இது வாயு, கருமைநிறம். இந்தப் பதினாறிதழிலுமுள்ள அக்ஷரங்களை இதற்கடியில் வரும் விசுத்திச் சக்கரத்திற் காண்க.

## விசுத்திச் சக்கரம்.



## ஆக்ஞை.

விசுத்திக்குப் பனிரண்டு விரற்கடைக்குமேல் வீணாத்தண்டின் முடிவாகிய லலாடமத்தியில் வட்டவடிவமாயிருக்கும். அதனுள் மூன்றிதழ்க்கமலமிருக்கும். அதில் யகார எழுத்து நிற்கும். அதிற் சதாசிவமும், மனோன்மணியும் எழுந்தருளியிருப்பார்கள். இது ஆகாயம், கனகநிறம். இந்த மூன்றிதழிலுமுள்ள அக்ஷரங்களை இதற்கடியில் வரும் ஆக்ஞை சக்கரத்திற் காண்க.

## ஆக்ஞை சக்கரம்.




இப்படி ஆருதாரச் சக்கரங்கள் ஆறும் ஓர் உருவத்தில் அமைந்திருக்கும் ஸ்தானங்களை பின்வரும் உருவப் படத்திற் காண்க.




இப்படி ஆதாரம் ஆறின் விபரமும் காண்க.

## அவஸ்தை ஐந்தின் விபரம்.

சாக்கிரம்,சொற்பனம்,சுழுத்தி,துரியம், துரியாதீதமென 5. இவற்றுள் சாக்கிரம்—லலாடஸ்தானம், சொற்பனம்—கண்டஸ்தானம், சுழுத்தி—இருதயகமலம்,துரியம்—நாபிக்கமலம், துரியாதீதம்—குறியிடம். இது கீழாலவஸ்தையாகும்.

## மேலாலவஸ்தையாவன

சாக்கிரத்திற் சாக்கிரம்,சாக்கிரத்திற்சொர்ப்பனம்,சாக்கிரத்திற் சுழுத்தி, சாக்கிரத்தில் துரியம், சாக்கிரத்தில் துரியாதீதம் என 5.

## மண்டல மூன்றுக்கு விபரம்.

அக்கினிமண்டலம், ஆதித்தமண்டலம், சந்திரமண்டலம் ஆக 3. இவற்றுள்,

அக்கினி மண்டலம்—மூலாதாரத்திலும்
ஆதித்த மண்டலம்—மணிபூரகத்திலும்
சந்திரமண்டலம்—சிரசின் நடுவேயுமாக இருக்கும்.

## விந்துநாதம் இரண்டுக்கு விபரம்.

மேலாலவஸ்தையில் துரியத்தில் முழங்கும் ஒலியாகும். இப்படி அண்டமும், பிண்டமும் ஒன்றாயமைந்திருக்கும். இவையெல்லாம் யோகானுபவத்தில் அபரோக்ஷமாக விளங்கும். இதனை,

"அண்டாண்ட வான்புவியு மாகமத்தி னுட்பொருளுங்
கண்டிதமா யான்விளங்கும் காயமதி லேயறியும்"
எனத் திருவள்ளுவரும்,

"அல்லும் பகலுஞ் சுகானந்த நிஷ்டையில்
அண்டமும் பிண்டமுந் தெரியும்"
எனக் குணங்குடியாரும் கூறினவை காண்க.

இதிற் பிர்மம் துரியாதீதமெனும் பரவெளியிற் ஜீவாதார சாக்ஷியாய் விளங்கும். இவற்றை ஆதாரமாகப்பெற்ற ஜீவர்கள் தான் இன்பம் அனுபவித்தற் கேதுவாகிய வீட்டிற்புகாது கண்ணிருந்தும் குழியில்விழக் கணக்குமுண்டோவெனின் ஜீவர்களின் ஞானசூரியனைத் திரோதாயி என்ற மேகமறைக்க அவர்கள் அஞ்ஞான இருளில் அகப்பட்டு அகக்கண் ஒளிமழுங்கி வெகுளி யென்னும் வனத்திற்புகுந்து மாயை யென்னும் பேய்பிடித்து அதனால் ஆன்மவிளக்கமென்னும் அறிவு அழிந்து கர்மேந்திரிய மென்னும் கள்வருடன்கூடி அவர்களால் ரௌரவம், கும்பிபாகம் கூடசால முதலிய நரகங்கள் விளைவாகும் பஞ்சமாபாதக உலகத்தை முடிபுனையப் பெற்றுக் கீழாலவஸ்தை ஐந்தெனுஞ் சிங்காதனத்திலிருந்து அரசுபுரிவார்கள். அஃதெப்படியெனில்

## சாக்கிராவஸ்தை.

ஞானேந்திரியம் 5, கர்மேந்திரியம் 5 அவற்றின் விஷயமாகிய சத்தாதி 5, வசனாதி 5, வாயுக்கள் 10, அந்தக்கரணம் 4 ஆக 34 தத்துவங்களும், ஜீவனும், இராஜாவும் படையும்போல புருவமத்தியில் வசிப்பது ஜாக்கிராவஸ்தையாகும்.

## சொற்பனவஸ்தை.

வாயுக்கள் 10, சத்தாதி 5, வசனாதி 5, அந்தக்கரணம் 4 ஆக இருபத்தினாலு தத்துவங்களுடன் ஜீவன் கண்டத்தில் வசிப்பது சொற்பனவஸ்தையாகும்.

## சுழுத்தியவஸ்தை.

பிராணவாயுவும், சித்தமும், ஜீவனும் இருதயத்தில் வசிப்பது சுழுத்தியவஸ்தையாகும்.

## துரியாவஸ்தை.

பிராணவாயுவும், ஜீவனும், நாபிக்கமலத்தில் வசிப்பது துரியாவஸ்தையாகும்.

## துரியாதீதம்.

மூலாதாரத்தில் ஜீவன் கேவலாவஸ்தையை அடைவது துரியாதீதமாகும். இதனை,

"சாக்கிரமா றுதலினிலிந் திரியம் பத்துஞ்
சத்தாதி வசனாதி வாயு பத்தும்
நீக்கமிலந் தக்கரணம் புருட னோடு
நின்றதுமுப் பானைந்து நிலவுங் கண்டத்
தாக்கியசொற் பனமதனில் வாயு பத்தும்
அடுத்தனசத் தாதிவச னாதி யாக
நோக்குகர ணம்புருட னுடனே கூட
நாவல்விரு பத்தைந்தா நண்ணி யோரே"

## அவஸ்தை ஐந்தின் விபரம்.

சாக்கிரம், சொற்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதமென 5. இவற்றுள் சாக்கிரம்—லலாடஸ்தானம், சொற்பனம்—கண்டஸ்தானம், சுழுத்தி—இருதயகமலம், துரியம்—நாபிக்கமலம், துரியாதீதம்—குறியிடம். இது கீழாலவஸ்தையாகும்.

## மேலாலவஸ்தையாவன

சாக்கிரத்திற் சாக்கிரம், சாக்கிரத்திற் சொர்ப்பனம், சாக்கிரத்திற் சுழுத்தி, சாக்கிரத்தில் துரியம், சாக்கிரத்தில் துரியாதீதம் என 5.

## மண்டல மூன்றுக்கு விபரம்.

அக்கினிமண்டலம், ஆதித்தமண்டலம், சந்திரமண்டலம் ஆ 3. இவற்றுள்,

அக்கினி மண்டலம்—மூலாதாரத்திலும்
ஆதித்த மண்டலம்—மணிபூரகத்திலும்
சந்திரமண்டலம்—சிரசின் நடுவேயுமாக இருக்கும்.

## விந்துநாதம் இரண்டுக்கு விபரம்.

மேலாலவஸ்தையில் துரியத்தில் முழங்கும் ஒலியாகும். இப்படி அண்டமும், பிண்டமும் ஒன்றுயமைந்திருக்கும். இவையெல்லாம் யோகானுபவத்தில் அபரோக்ஷமாக விளங்கும். இதனை,

"அண்டாண்ட வான்புவியு மாகமத்தி னுட்பொருளும்
கண்டிதமா யான்விளங்குங் காயமதி லேயறியும்"
எனத் திருவள்ளுவரும்,

"அல்லும் பகலுஞ் சுகானந்த நிஷ்டையில்
அண்டமும் பிண்டமுந் தெரியும்"
எனக் குணங்குடியாருங் கூறினவை காண்க.

இதிற் பிர்மம் துரியாதீதமெனும் பரவெளியிற் ஜீவாதார சாக்ஷியாய் விளங்கும். இவற்றை ஆதாரமாகப்பெற்ற ஜீவர்கள் தான் இன்பம் அனுபவித்தற் கேதுவாகிய வீட்டிற்புகாது கண்ணிருந்தும் குழியில்விழக் கணக்குமுண்டோவெனின் ஜீவர்களின் ஞானசூரியனைத் திரோதாயி என்ற மேகமறைக்க அவர்கள் அஞ்ஞான இருளில் அகப்பட்டு அகக்கண் ஒளிமழுங்கி வெகுளி யென்னும் வனத்திற்புகுந்து மாயை யென்னும் பேய்பிடித்து அதனால் ஆன்மவிளக்கமென்னும் அறிவு அழிந்து கர்மேந்திரிய மென்னும் கள்வருடன்கூடி அவர்களால் ரௌரவம், கும்பிபாகம் கூட சால முதலிய நரகங்கள் விளைவாகும் பஞ்சமாபாதக உலகத்தை முடிபுனையப் பெற்றுக் கீழாலவஸ்தை ஐந்தெனுஞ் சிங்காதனத்திலிருந்து அரசுபுரிவார்கள். அஃதெப்படியெனில்

## சாக்கிராவஸ்தை.

ஞானேந்திரியம் 5, கர்மேந்திரியம் 5 அவற்றின் விஷயமாகிய சத்தாதி 5, வசனாதி 5, வாயுக்கள் 10, அந்தக்கரணம் 4 ஆக 34 தத்துவங்களும், ஜீவனும், இராஜாவும் படையும்போல புருவமத்தியில் வசிப்பது ஜாக்கிராவஸ்தையாகும்.

## சொற்பனவஸ்தை.

வாயுக்கள் 10, சத்தாதி 5, வசனாதி 5, அந்தக்கரணம் 4 ஆக இருபத்தினாலு தத்துவங்களுடன் ஜீவன் கண்டத்தில் வசிப்பது சொற்பனவஸ்தையாகும்.

## சுழூத்தியவஸ்தை.

பிராணவாயுவும், சித்தமும், ஜீவனும் இருதயத்தில் வசிப்பது சுழூத்தியவஸ்தையாகும்.

## துரியாவஸ்தை.

பிராணவாயுவும், ஜீவனும், நாபிக்கமலத்தில் வசிப்பது துரியாவஸ்தையாகும்.

## துரியாதீதம்.

மூலாதாரத்தில் ஜீவன் கேவலாவஸ்தையை அடைவது துரியாதீதமாகும். இதனை,

"சாக்கிரமா றதனினிலிந் திரியம் பத்துஞ்
சத்தாதி வசனாதி வாயு பத்தும்
நீக்கமிலந் தக்கரணம் புருட னோடு
நின்றதுமுப் பானைந்து நிலவுங் கண்டத்
தாக்கியசொற் பனமதனில் வாயு பத்தும்
அடுத்தனசத் தாதிவச னாதி யாக
நோக்குகர ணம்புருட னுடனே கூட
நாலிரு பத்தைந்தா நண்ணி யோரே"

"சுழுத்தியித யந்தனிற் பிராணன் சித்தஞ்
சொல்லரிய புருடனுடன் மூன்ற தாகும்
வழுத்தியநா பியிற்றுரியம் பிராண னோடு
மன்னுபுரு டனுங்கூட வயங்கா நிற்கும்
அழுத்திடுமூ லந்தன்னிற் றுரியா தீத
மதனிடையே புருடனொன் றியமரும் ஞானம்
பழுத்திடும்பக் குவரறிவா ரவஸ்தை யைந்திற்
பாங்குபெறக் கருவிநிற்கும் பரிசு தானே"

எனத் தாயுமானவரும் கூறினர். இவற்றுள்,

சாக்கிரத்தில் ஜீவன் வசிப்பது ஒரு பங்கும் சொற்பனத்திற் காற்பங்கும், சுழுத்தியில் மாகாணிப்பங்கும், துரியத்திற் பத்து நிமிஷமும், துரியாதீதத்தில் ஒரு நிமிஷமுமாக வசித்து மறுபடியும் சாக்கிரத்தை அடையும். இவை கீழாலவஸ்தையாம்.

மேலாலவஸ்தை ஐந்தையும் அடைவதுயோகானுபவத்தால் இயலும். இந்நிலையை அடைந்தவர்க்கு மரணமென்பது சொற்பனத்திலும் இலவாம். இவ்வுண்மையைத் திருமூலநாயனாரும்,

"மேலஞ்சு சென்று விரவவல் லார்க்குக்
காலனு மில்லை கனவிலு மில்லையே"

எனக் கூறினர்.

ஆதலின் கீழாலவஸ்தை ஐந்திலுமிருந்து அரசாக்ஷி பண்ணிய ஜீவன் உண்மையை அறியாமையால் அடிக்கடி ஜென்மந் தோறும் மரணவாதனையாலும் பிறவிவேதனையாலும் துன்புற்று

வருந்தும் இவ்விதம் அறியாமையாகிய அஞ்ஞானத்தால் அவதி யுறும் ஆன்மாக்கள் அதிசூக்ஷ்மகாரணராகிய பரமேஸ்வரனது ஆன்ம சொரூபத்தை அறிந்து வழிபட்டுய்யார்கள் என அப் பரம்பொருள் கிருபைகூர்ந்து அரூபத்தினின்றும் அரூபாரூப மாகத் திருக்கோயில்தோறும் பிரதிபிம்பித்துநின்று அங்ஙனம் ஆன்மாக்கள் அறிந்து வழிபட்டுய்யுமாறு வேதாகமங்களை உண்டுபண்ணி அவற்றை அறிவதற்கு நல்லறிவையும் உதவி அந்நல்லறிவை செம்பிற் களிம்புபோலும், அரிசியில்த்தவிடுபோ லும்நின்று மாசுபடச்செய்யும் அஞ்ஞானத்தை விலக்க கல்வி கேள்வியையும் அருளினர். இதனைத் தாயுமானவரும்,

"ஐவகை யெனும்பூத மாதியைவ குத்ததனு
ளசராசர பேத மான
யாவையும்வ குத்துநல் லறிவையும்வ குத்துமறை
யாதிநூ லையும் வகுத்து"

என வருளியது காண்க.

ஜீவர்கள் கல்வி கேள்வியால் வேதாகமங்களை உணர்ந்து அவ்வேதாகமங்களால் பரமேஸ்வரனது தன்மையை உணர்ந்து அவர் எழுந்தருளியிருக்கும் திருக்கோயில்தோறும் சென்று அறியாமை அறிவு என்னும் இரு பகுதியாலும் பல ஜென்மங் களில் இயற்றிய சகாமகர்மங்களாகிய வந்தனை வழிபாடுகளை பரமேஸ்வரன் ஏற்று அவைகளுக்குத் தக்க பலனாக சிறிது விவேக ஞானத்தை அருளுவர்.

ஆதலின் கீழான பிறவியினின்றும் நீங்கி மேலான பிறவியை எடுத்து ஞானம் பெறுவது எப்படியென விசாரித்து அறிய வேண்டும்.

## சித்தாந்த தத்துவக் கட்டளை முற்றிற்று.

---

ஓம்

பரப்பிர்ம்மணே நம:

# உபதேசக் கட்டளை.

---

ஆன்மாக்கள் எண்ணிறந்த காலமாய் அஞ்ஞானமாகிய அந்தகாரத்தில் அகப்பட்டதனால் பாவ புண்ணியங்களை உணர்ந்து நன்மையைத் தருவதாகிய சத்கிரியையாதி சிவ புண்ணியங்களைச் செய்யும் விவேகமின்மையால் தீமையைத் தருவதாகிய பாவகிர்த்தியங்களில் திரிகரணங்களாலும் பிரவிர்த்தி செய்து பாவம் அதிகரித்து அதன் பயனால் அதிகத் துன்ப முண்டாய் அத்துன்பத்தைச் சகிக்கமுடியாது கண்கெட்ட மாடு போல் கலக்கமுற்று எதிர்காலத்தில் வரும் பிறவிகளிலும் அறிவு குறைந்தனவாகிய கீழான பிறவிகளிற் செனித்து உழன்று அப்பிறவியின் ஈறுதோறும் இயமதூதர்களால்த் தண்டிக்கப் பெற்று கற்பகோடிகாலம் நரகத்தழுந்தித் துன்புறுவார்கள். இவ்விதமாக அறிவுகுறைந்த கீழான பிறவிகளிற் செனிப்பதும், மரிப்பதும் நரகத்தழுந்துவதுமே சகசமாகக்கொண்டு எண்ணிறந்தகாலமாகத்துன்புறும் ஆன்மாக்களுக்கு பரமேஸ்வரன் மனமிரங்கி அவ்வான்மாக்கள் படிக்கிரமமாக மேலேறி உஜ்ஜீவிப்பதற்கு ஏதுவாகிய பிறவிகளைக் கொடுப்பதற்குத் திருவுளங் கருதி அதமப் பிறவியாகிய அசர வஸ்துக்களுள் உத்தமமாகிய தென்னை, வில்வம், அறுகு, தும்பை, ஊமத்தை, வெள்ளெருக்கு, அலரி, முல்லை முதலிய கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ ஆகிய இவைகளிற் சிவபூசைக்கு உபயோகமாகும்படியாக அவதரிக்கச் செய்வர். அப்படி அவதரித்தவைகளைப் பிறர் எடுத்துச்

சிவபூசைக்கு உபயோகப்படுத்துவர். அப்படிப் பலஜென்மம் அவதரித்து அவைகளைப் பிறர் எடுத்து ஈசுரகிரியைக்கு உபயோகமாக்கியதன் பயனால் மத்திமப்பிறவியாகிய மிருகங்களுக்குள் உத்தமமாகிய பசுவாய்ப்பிறந்து சிவபூசைக்குப் பஞ்சகவ்வியங்களை உதவவும் சிவனடியார்களுக்குப் பால் முதலியன கொடுக்கவும், காளையாய்ப்பிறந்து திருக்கோயிலுக்குக் கல் இழுக்கவும், திருவிளக்கிடுதற்குச் செக்கு இழுக்கவும், இரதோற்சவங்களில் இரதம் இழுக்கவும், சிவனடியார்கட்கு வாகனமாகவும், பிறர் செய்விப்பர். அங்ஙனம் பிறர் செய்விக்கப்பெற்றதன் பயனால் மறுபடியும் அப்புண்ணியங்களைச் செய்தற்குரிய பிறவிகளையெடுக்கும். அப்படிப் பல ஜன்மங்களால்செய்த சிவ புண்ணியத்தின் பயனால் மனுட ஜென்மம் உண்டாகும். அப்படி மனுட ஜென்மம் உண்டாகியவர்க்கும் பாவ புண்ணியங்களைப் பகுத்தறியும் ஆன்ம விளக்கம் குறைந்திருக்கும். ஏனெனில் முப்பிறவிகளில் அறிவு குறைந்த அசரங்களாகயிருந்தும், பகுத்தறிவில்லாத மிருகங்களாக இருந்தும் அவைகள் தாம் சிவபுண்ணியமாகிய சத்கிரியைக்கு உபயோகமாகின்றோமென்பதை உணராதவைகளாக இருந்தபோது அவைகளைப் பிறர் கொண்டுசெய்த சத்கிரியை முதலிய சிவபுண்ணியங்களின் பயனால் உருவமாறி மனிதவடிவமுண்டாகியது. ஆகையால் அந்தஜ் ஜென்மத்திற் பகுத்தறிவு தோன்றுதொழிந்தனவாம். பூர்வம் மிருகங்களாகப் பிறந்திருந்தபோதும் அறியாமையாற்செய்த சிவபுண்ணியப் பயனால் மனுட ஜென்மம் வந்ததுபோல நிகழும் ஜென்மத்திலும் அறியாமையுடையவராயினும் சிவபுண்ணியம் செய்வாராயின் அவர்கட்கு மறுபடியும் மனுடஜென்மம் உண்டாம். அப்படிப்

பலகற்ப காலம்வரை சிவார்ச்சனை முதலிய சிவபுண்ணியங்கள் செய்தவர்க்குப் பாவ புண்ணியங்களை யறியும் பகுத்தறிவு தோன்றும். இவ்வுண்மையை ஔவைப்பிராட்டியும்,

"பல்லூழிகாலம் பயின்றரனை யர்ச்சித்து
நல்லுணர்வு பெற்ற நலம்"

எனக் கூறினள். ஆதலின்,

எழுவகைத் தோற்றத்தினும், உயர்வுடையதாகிய மக்கட் பிறவியை எடுத்தவர் யாவரும்,

"நாட்சென்று விக்குண்மேல் வாராமுனல் வினை
மேற்சென்று செய்யப்படும்"

என்பதை உணர்ந்து இப்போது எடுத்ததேகம் அழியுங்காலம் வருவதன்முன்னம் சிவபுண்ணியங்களைச் செய்யவேண்டும். அப்படிச் செய்வோமாயின் அவை நாம்பெற்ற உடம்பும், செல்வமும் அழியுங்காலத்தும் புண்ணியம் அழியாத் துணையாகிவருவதாகும். இதுபற்றியே நாயனாரும்,

"அன்றறிவா மென்னா தறஞ்செய்க மற்றது
பொன்றுங்காற் பொன்றாத் துணை"

என விளக்கியருளினர்.

இத்தகைய புண்ணியத்தைச்செய்யாதுவிடுவரேல் அவர்கள் பூர்வபுண்ணியத்தாற் பெற்ற மனுட ஜென்மத்தையும் இழந்து நரகிற்கு ஆளாவதுமன்றி வரும்பிறவிகளிலும் கால், கை முதலிய அவயவங்களற்றனவும் சத்தாதி விடயங்களை அறியும்

அறிவு குன்றந்தனவுமாகிய பாம்பு, புழு, சிப்பி, சங்கு முதலிய பிறவிகளை எடுத்து உழல்வர் என்பதை,

"நடலை வாழ்வுகொண் டென்செய்தீர் நாணிலீர்
சுடலை சேர்வது சொற்பிர மாணமே
கடலி னஞ்சமு துண்டவர் கைவிட்டால்
உடலி னுற்கிடந் தூர்முனிப் பண்டமே"

என்னும் தேவாரத்தால் உணரவரும்.

## பக்தி.

ஆன்மாக்கள் விரும்புவனவற்றில் உண்டாகும் உள்ள நெகிழ்ச்சியே பக்தியாகும். அன்பு, விசுவாசம், நட்பு, காதல், பிரியம் முதலியன பக்தியின் பரியாய நாமங்களாகும். இந்தப் பக்தியும் பரபக்தி, அபரபக்தி என இருவகையாகும். இவற்றுள், தாய், தந்தை, சகோதரர், மனைவி, மக்கள், சுற்றந்தார், சிநேகிதர் முதலானோரிடத்தும் பொருள் முதலியவற்றிலும் உண்டாகும் பக்தி அபரபக்தியாகும். குருவினிடத்தும், சாஸ்திரங்களிடத்தும், கடவுளிடத்தும் சத்கிரியையாதி சிவபுண்ணியங்களிடத்தும்உண்டாகும் பக்தியே பரபக்தியாகும்.

## கர்மம்.

சகாமகர்மம், நிஷ்காமகர்மம் என இருவகைப்படும். இவற்றுள்,

சகாமகர்மமாவது: அபரபக்தியுடைய ஆன்மாக்கள் இம்மைப்பயனுக்கு உரியனவாகிய பொருள், புத்திரர் முதலியவற்றை விரும்பிச்செய்வதும் மோக்ஷமடையும் விருப்பமின்றிச்

செய்வதுமாகிய சத்கருமங்கள் யாவும் சகாமகர்மமாகும்.

நிஷ்காமகர்மமாவது: பரபக்தியுடைய ஆன்மாக்கள் துக்கமிலாத சுகசொரூபமாகிய பிர்மசைதன்யத்தை அடையவேண்டுமெனும் விருப்பத்துடன் மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகிய மூன்றையும் முறையோடு பூசிப்பதும், சிவனடியார்கட்குத் திருத்தொண்டு செய்வதுமாகிய சிவபுண்ணியங்களைச் செய்யும்போழ்து உலக போகத்தைப் பெறவேண்டுமெனும் விருப்பமின்றி இறைவனின் திருவருளை விரும்பிச் செய்யும் புண்ணியங்களை ஈசுரார்ப்பணமாகச்செய்வதே நிஷ்காமகர்மமாகும்.

ஆனால் அருளை விரும்பிச் செய்வதும் ஆசையன்றோ; அவை எப்படி நிஷ்காமகர்மமாகுமெனின் தன் எஜமானனின் தயவைவிரும்பும் அடிமைக்காரன் தன் எஜமானனுக்குச் செய்யும் வேலைகட்குக் கூலி வேண்டாம், உங்கள் தயவிருந்தாற்போதும் என்பது எஜமானன் தன்னிடத்துள்ள முன்னைய அன்பிலும் பன்மடங்கு சிறந்த அன்புடையவராகித் தமது சிறுதொழிலுக்கேற்ப அற்பக்கூலியைக் கொடாது அவர் மனமுவந்து பின்னற் பேருதவிசெய்யும் பொருட்டே யென்பது உலக விஷயங்களில் நிகழ்வதை யாவரும் உணர்ந்ததே. அதேபோல நாமும் நமது ஆண்டானாகிய கடவுளின் கிருபையை

"..................நின்வார் கழற்கன் பெனக்கு
நிரந்தரமாயருளாய் நின்னையேத்த முழுவதுமே"

என மாணிக்கவாசகர் கூறியபடி நாமும் பெறுமாறு நாம் செய்யும் புண்ணியங்களை ஈசுரார்ப்பணமாகச்செய்து உலக விஷயங்களில்

"ஆசைக்கோரளவில்லை" என ஓடி அலைகின்ற மனதை அவ்வாசை யில் ஓடவிடாது நிறுத்தி கடவுளிடத்தில் போயொன்றுதற்குப் பேராசையோடு செல்லும்படி செலுத்துவோமாயின் பரமேஸ் வரன் நம் பேரில் தயவுசெய்து அழியாப் பதவியைக்கொடுப்பர். இதனை,

"வீணாவல் கொள்ளாதே மேலாம்ப ரம்பொருளைக்
காணாவல் கொள்ளக் கருது"

"மருவு மயற்புருடன் வருநேரங்காணுமல்
உருகுமனம் போலென்னுள்ள முருகுவது மெக்காலம்"

"எவ்வனத்தில் ஸ்திரீ மோகம் எப்படியுண்டப் படிப்போற்
கவ்வனத்தில் யானுன் கருத்துவைப்ப தெக்காலம்"

என்னும் ஆன்றோருண்மொழிகளே நன்குணர்த்துகின்றது. ஆகவே அநித்திய போகங்களை விரும்பும் ஆசையே காமியமாகு மன்றி நித்யானந்த சுகத்தை விரும்புவதால் அவ்வாசை காமிய மாகாவாம்.

## சாதன சதுட்டயம்.

நிஷ்காமபுண்ணியஞ் செய்த சீவர்களுக்கு அப்புண்ணியப் பயனால் நித்யாநித்யவஸ்து விவேகம் இகபரபோக விராகம் சமாதி சட்சம்பத்தி, முமுக்ஷுத்துவம் என்னும் சாதனசதுட்டயங்கள் அமையும். இவற்றுள்,

## நித்யாநித்யவஸ்து விவேகம்.

நித்யவஸ்து இன்னது அநித்யவஸ்து இன்னது என்று

மஹான்களாலும் அநுபவ சாஸ்திரங்களாலும் பிர்மம் ஒன்றே நித்யமெனவும் அதையன்றி மற்றவையெல்லாம் அநித்யமெனவும் பரோக்ஷமாக அறிவதே விவேகமாம்.

## இகபரபோக விராகம்.

இவ்வுலகத்திற் சகாமகர்மங்களின் பயனால் உண்டாகும் மனைவி மைந்தர், பொருள், வீடு, நிலம், உத்தியோகம், அரசாக்ஷி முதலிய இகபோகங்களிலும் பரத்திற்கிடைப்பதாகிய இந்திர லோகம், சத்தியலோகம், வைகுந்தம், கந்தர்வலோக முதலிய சுவர்க்காதி போகங்களிலும் வெறுப்புத் தோன்றுவதாம்.

## சமாதி சட்சம்பத்திக்கு விபரம்.

சமம், தமம், விடல், சகித்தல், சமாதானம், சிரத்தை என ஆறாகும். இவற்றுள்,

**சமமாவது:** அந்தக்கரணங்களைத் துர்க்கிருத்தியங்களைக் கருதவிடாது தடுப்பதாம்.

**தமமாவது:** புறக்கரணங்களாகிய ஞானேந்திரிய கர்மேந்திரியங்களைத் துர்க்கிருத்தியங்களை நோக்கவிடாமலும், செய்யவிடாமலுந் தடுப்பதாம்.

**விடலாவது:** குடும்பவிஷய முதலிய உலக விவகாரங்களை அறவே யொழிப்பதாம்.

**சகித்தலாவது:** சௌக்கியங்களாலும்: அசௌக்கியங்களாலும், ஸ்துதியாலும், நிந்தையாலும் வரும் சுகதுக்காதி சந்தோஷ அசந்தோஷங்களையும் சமபாவனையாக சகித்திருப்பதாம்.

சமாதானமாவது: ஆசிரியாது சிரவணோபதேசங்களை மனம் முதலிய கரணங்கள் சத்தியமாக நினைத்து அதற்கு உடன்படச் செய்வது சமாதானமாகும்.

சிரத்தையாவது: பரமாசிரியராகிய சற்குருவினிடத்தும் சாஸ்திரங்களிடத்தும் அதிக அன்புவைத்து குருநாதருக்குப் பணிவிடைசெய்வதிலும், சாஸ்திரங்களைக் கற்றல், கேட்டல் முதலியவற்றிலுமுண்டாகும் தீவிர முயற்சியே சிரத்தையாகும்.

## முமுக்ஷுத்துவம்.

முன்னே கூறிய மூன்று சாதனங்களும் பூர்த்தியானபின்பு தலையில்த் தீப்பிடித்தவன் தண்ணீரைத் தேடுவதுபோலவும், அதிகப் பசியுடையவன் அன்னத்தைத்தேடுவதுபோலவும், துக்க வடிவாகிய அஞ்ஞானத்தை விடுத்து சுகவடிவாகிய மெஞ்ஞானத்தை அடையவேண்டுமென உண்டாகும் விருப்பமே முமுக்ஷுத்துவமாகும். இதனை,

"நித்திய வநித்தி யங்க ணெண்ணயந் தெரி விவேகம்
மத்திய விகப ரங்கள் வருபோகங் களி னிராசை
சத்திய முரைக்க வேண்டுஞ் சமாதியென் றுறு கூட்டம்
முத்தியை விரும்பு மிச்சை முமுக்ஷுத்துவ மென்பர்மேலோர்

சமந்தமம் விடல் சகித்தல் சமாதானஞ் சிரத்தை யாறுஞ்
சமமகக் கரண தண்டந் தமம்புறக் கரண தண்டம்
அமர்மனை விவகா ரங்க ளறுதலே விடலென் றுரு
மமர்செயுஞ் சுகதுக் காதி யனுபவிப் பதுசகித்தல்

சிரவணப் பொருளைத் தானே சித்தஞ்சிந் திக்குமாறு
சரசமாய் வைக்கு மித்தைச் சமாதான மென்பர் மேலோர்
பரமசற் குருநூ லன்பு பற்றலே சிறத்தை யாகும்
வரமிகு சமாதி யாறு வகையாம்சொற் பொருளீ தாமே"

எனக் கைவல்யத்தாரும் கூறினர்.

மேற்கூறிய நான்கு சாதனங்களும் குறைவின்றி அமையப் பெற்ற பக்குவரே ஆச்சாரியர் அனுக்கிரஹிப்பதைப் பெற்றுக் கொள்ளத்தக்கவராவர். அந்தச் சாதனங்கள் இல்லாதவர்க்கு பரமேஸ்வரன் மான் மழுவுடையராய்த் தோன்றி அருளினும் அபக்குவர் அவ்வுண்மையை அறியார். ஆகவே மோக்ஷம் அடையவிரும்புவோர் யாவரும் மேற்கூறிய சதுட்ட சாதனங் களையும் பெறவேண்டியது அவ்சியமாகும். அவை பெறுதற்குச் சாது சங்கத்திற் பழகவேண்டும். இதுபற்றியே மஹாராஜா துறவிலும்,

"மேலாஞ் சதுட்ட சாதனங்கள் மேவி நிறைந்த பேர்க்குரைக்கின்
மாலா யதுநா மெனத்திடமாய் மகிழ்வா ரவையி லாதவர்க்கு
மேலா மீசன் மான்மழுவாய் விளங்கி யுரைத்தும் விளங்காது
மேலாஞ் சாத னங்கள்வர மேவ வேண்டுஞ் சாதுசங்கம்"

எனக் கூறுகின்றது.

ஆனதால் சாதனங்களைப் பெறவேண்டிச் சாதுசங்கத்திற் பழகினும் பூர்வபுண்ணியமுடைய பழையவடியார்கட்குச்சாதனங் கள் அமைவது எளிதினும் எளிதாம். புதிய விவேகிகட்குச் சாதனங்கள் அமைவது அரிதினும் அரிதாம். இதில் புதிய விவேகி

என்பதும் பழைய விவேகி என்பதும் அறிவதெப்படியெனின் சாது சங்கத்தின் சிரவணோபதேசங்களைப்பெறுகின்ற தீவிர புத்தியாலும் மந்தப்புத்தியாலும் அறியவரும். இதனை,

"சாதன மின்றி யொன்றைச் சாதிப்பா ருலகி லில்லை
யாதலா லிந்த நான்கு மடைந்தவர்க் கறிவுண் டாகும்
நூதன விவேகி யுள்ளி நுழையாது நுழையு மாகிற்
பூதசென் மங்கள் கோடி புனிதனும் புருட னாமே"

என்பதனுலுணரக் கிடக்கின்றது.

பூர்வம் சாதுசங்கப்பணிவிடையாகிய புண்ணியமில்லாத தன்மையால் நிகழும் சென்மத்தில் விவேகமில்லை என்பதை யுணர்ந்து இனிவரும் ஜென்மத்திலாவது விவேகமுண்டாக வேண்டுமென்பதை எண்ணிச் சாதுசங்கத்திற்குப் பணிவிடை செய்து பழகவேண்டியது அவசியமாகும். இப்படிப் பலகற்ப காலமாய்ச் சாதுசங்கப் பணிவிடையாகிய நிஷ்காமதவஞ் செய்த வர்கட்கு நித்யாநித்யங்களை அறியும் விவேகமுண்டாய்ப் பின்னும் அந்த விவேகத்தால் பலகற்பகாலம் தவஞ்செய்து திருவருட்டாக முண்டாய் திருவருட்டாகத்தால் பல கற்பகாலம் தவஞ்செய்த வர்கட்கு குருதரிசனமுண்டாய் பல கற்பகாலமாய்ச்செய்த பாவத் தால் மூடப்பட்ட சுரோத்ரகபாடம் திறந்து ஆச்சாரியானுக்கிர கத்தை உட்கொண்டு ஞானம்பெறுதற்கு ஏதுவுண்டாகும். இவ் வுண்மையைச் சுந்தரானந்த நூலாரும்,

"பல்லூழி நிஷ்காம தவம்புரிந்தால் விவேகமெட்டிப் பார்க்குஞ் சற்றே
பல்லூழி விவேகமொடு பயின்றவர்க்கே யருட்டாகம் பலிக்கு மோங்க

பல்லூழித தாகியரைப் பரமகுரு வருட்கடைக்கண் பார்க்கும் பார்க்கப்
பல்லூழிப் பவத்திலிட்ட செவிக்கபா டந்திறந்து பயன்பெற் றாரே"

எனக் கூறினர்.

ஆனால் எண்ணிலாத ஊழிகாலம் தவஞ்செய்தோ குரு தரிசனம் பெறவேண்டுமெனப் பலரும் சந்தேகிக்கலாம். அப்படிச் சந்தேகிப்பதற்கு நிகழும் ஜென்மத்தில் மானுடராய்த் தோன்றியவர்களில் முமூக்ஷுக்களுக்கும் ஏனையோர்க்கும் ஆறறிவு சமமாக இருந்தும் முமூக்ஷுக்கள் அறிவதாகிய சுவானுபவஞானம் ஏனையோர்க்கு விளங்காது பலர் படிக்காதவர்களாகவும் சிலர் படித்தவர்களாகவும், படித்தவர்களிலும் பலர் தெய்வபக்தி இல்லாதவர்களாகவும் சிலர் தெய்வபக்தியுள்ளவர்களாகவும் தெய்வபக்தியுள்ளவர்களிலும் பலர் ஞானசாஸ்திரங்களை யுணராதவர்களாகவும் சிலர் ஞானசாஸ்திரங்களை உணர்ந்தவர்களாகவும் ஞானசாஸ்திர முணர்ந்தவர்களிலும் பலர் உண்மையான சுவானுபவ ஞானத்தை உணராதவர்களாகவும் இருக்கின்றார்கள். இப்படி இருப்பதற்குக்காரணம் மேற்சொல்லிய கிரமப்படி பல்லூழிகாலமாக நிஷ்காம தவம்செய்து பக்குவமடையாததே காரணமாகுமென்பதை யுணர்க. இதனை,

"பாரப்பா நால்வேத நூலும்பாரு
பற்றாசை வைப்பதற்கோ பிணையோகோடி
வீரப்பா வொன்றொன் றாக் கொன்றை மாறி
வீணிலே யவர்பிழைக்கச் செய்த மார்க்கம்
தேரப்பா தெருத் தெருவே புலம்புவார்கள்
தெய்வநிலை யொருவருமே காணார் காணார்

ஆரப்பா நிலைநிற்கப் போரா ரையோ
ஆச்சரியங் கோடியிலே யொருவன் றானே"

என அகத்தியமுனிவரும் விளக்கியருளினர்.

## குரு உற்பத்தி.

சாதன சதுட்டயங்கள் ஒருங்கே அமையப்பெற்ற அதிதீவிர பக்குவாதிகாரியானவன் இந்திரியங்களாலும் துஷ்ட தேவதைகளாலும் பூத உடம்புகளாலும் வரும் சுகதுக்கங்களாகிய தாபத்திரயாக்கினியால்த் தகிக்கப்பட்டுவருந்தி அவ்வருத்தத்தை நீக்கும் ஞானாசிரியரது பாதோதகமாடுதற்கு கருதி மனம் துடிதுடித்து அங்ஙனம் செல்லவொட்டாது தடையிட்டிருக்கும் மனைவி மக்கள் நிதி முதலிய பாசப்பிணிப்பை மெஞ்ஞான வைராக்கியமென்னும் வாளால் அறவேதுணித்து,

"துன்பந்தோன்றி லெவருந் துறந்தேகராய்த் தனித்தே
இன்பந்தேட லியற்கை"

என மஹாராஜா துறவிற் கூறியபடியே வெளியேறி ஞானாசிரியரைத் தேடுவானவன். இதனை,

"இவனதி காரி யாஞே னிந்திரி யங்க ளாலும்
புவனதெய் வங்க ளாலும் பூதபௌ திகங்க ளாலுந்
தவனமுன் றடைந்து வெய்யிற் சகித்திடாப் புழுப்போல் வெம்பி
பவமறு ஞான தீர்த்தம் படிந்திடப் பதறிஞனே"

என்பதனுணர்க.

இவ்விதமாகத் தேடிய பக்குவாதிகாரிக்கு,

"மூர்த்திதலம் தீர்த்தம் முறையாற் றொடங்கினற்கோர்
வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே"

என்றதற்கிலக்காய் ஈசுரானுக்கிரஹத்தால் ஜீவகாருண்யம், ஈசுர பக்தி, பாசவைராக்கியம், பிர்மஞானமென்னும் நான்கு குணங்களும் விசேடப்ரசித்தி ஒழுங்காய் அமைந்திருக்கின்ற ஞானாசிரியர் உதயமாவர். இவற்றுள்,

## பிர்மஞானம்.

ஞானம், பரோக்ஷஞானம், அபரோக்ஷஞானம், பாகியஞானம், ஆந்தரஞானம், உலகஞானம், மோக்ஷஞானம் என விரியும். இவற்றுள்,

பரோக்ஷஞானம் கல்விகேள்வியால் அறிவது. அபரோக்ஷஞானம் சட்சேந்திரியங்களால் அறிவது. பாகியஞானம் பகிரங்கப் பொருளை அறிவது. ஆந்தரஞானம் அந்தரங்கப்பொருளை அறிவது. உலகஞானம் உலகப்பொருளை அறிவது. மோக்ஷஞானம் மோக்ஷப்பொருளை அறிவது. இவற்றுள்,

உலகஞானம் ஒருவர்க்கு விசேடமாகயிருப்பினும் அவை பூர்வஜன்மங்களில்செய்த மத்திமகர்மமாகிய சகாம்கர்மங்களின் பயனாற்பெற்றதாகும். ஆனதால் அவை பெரிதுமல்லவாம். ஜீவப்பிர்ம ஐக்கியங்கூடுதற்கு ஏதுவாகிய ஆந்தரஞானமாகிய மோக்ஷஞானம் ஒருவர்க்குளதேல் அவை பூர்வஜென்மங்களிற் செய்த உத்தமமாகிய நிஷ்காமகர்மப்பயனாற் பெற்றதாகும். இதுபற்றியே ஔவையாரும்,

"ஆதியோடொன்று மறிவைப் பெறுவதுதான்
நீதியாற்செய்த தவம்"

எனக் கூறினார்.

ஆதலின் எல்லா ஞானங்களுக்கும் மேலாகியஞானம் எதுவோ அதுவே பிர்மஞானமாகும். அது யாதெனின் ஜீவப்பிர்ம ஐக்யங் கூடுமார்க்கத்தை உணர்வதாகும். ஜீவப்பிர்ம ஐக்யங் கூடுமார்க்கமாவது யாது? மானுட சரீரத்தில் பகிரங்கத்தில் விளங்குவதாகிய நவத்துவாரங்களையும் அன்றி அந்தரங்கத்தில் விளங்குவதாகிய சுழுமுனை வாசலை அறிந்து அவ்வாசலில் பிராணவாயுவைப் பூரககும்பகரேசகம்செய்யும் முறையை உணர்வதாம். இவ்வுண்மையை நமது சந்தப்பாவலரவர்களும்,

"மூலாதார மோடேற்றி யங்கியை
யாறுதார மோடோட்டி யந்திர
மூலாவாயு வையேற்றி நன்சுழி — முனையூடே
மூதாதாரம ருப்பிலந்தர
நாதாகீத மதார்த்திடும் பர
மூடே பாலொழி யாத்துமந்தனை — விலகாமல்"

என அருளினர்.

இவ்வுண்மையை அறியாது சிலர்கள் மூச்சைப்பிடிப்பதனால் ஆவது ஒன்றுமில்லையெனத் தூஷிப்பர். இவர்கள் இவ்வாறு தூஷிப்பது அனுபவமார்க்கத்தை அறிந்த பெரியோர்களிடமிருந்து கைமுறையாகப் பழகாததினால் ஏற்பட்ட அறியாமையேயாகும். இத்தகையோருக்குச் சொல்லினும் விளங்காது அதனை மறுத்துவிட்டு கண்டபடி அலைவர். இதுபற்றியே சுப்பிரமணியர் ஞானத்திலும்,

"காசிநதி தனிலேதான் தீர்த்தமாடி
கரைகாணு மந்திரங்க டன்னையோதி

வாசிநிலை யறியார்மற் றெய்வமென்று
வணங்கியவ னலைந்திடுவான் வருவதேது
தோசிகளுக் கெத்தனையோ சொன்னாலுந்தான்
தோற்றாது அலைந்திடுவான் கண்டுபாரே"

எனக் கூறியதே நன்குணர்த்துகின்றது. ஆதலின் பரமஞான ஆச்சாரியத் தன்மைக்கு உரியவர் யாவர்? அவருக்குப் பணி விடை செய்வதன் பயன் யாது? எனின், இயமநியமங்களைக் கடந்த ஆசனம் பிராணாயாமத்தைத் தெரிந்தவரும், கற்பமுறையை யுணர்ந்தவருமே பரமஞான ஆச்சாரியத் தன்மையையுடையவராவர். அத்தகைய பெரியார்க்குப் பணிவிடைசெய்பவர்க்கே அநித்திய அசுத்ததுக்கமயமாகிய அஞ்ஞானத்தை ஒழித்து நித்ய சுத்தசுகமயமாகிய ஞானம் பெறுவது சாலும். இது பற்றியே தாயுமானப் பெருந்தகையும்,

"வல்லாள ராயியம நியமாதி மேற்கொண்ட
மாதவர்க் கேவல்செய்து
மனதின் படிக்கெலாஞ் சித்திபெறலாம் ஞானம் வாய்க்கும்"

"அன்பர்பணி செய்யவெனை யாளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானேவந் தெய்தும்ப ராபரமே"

எனவும்,

"அண்டு மிருவினைப்பே யண்டாத டிப்பவர்க்குத்
தொண்டுசெய்வார்க் கன்றோ சுகங்கா ணிராமயமே"

"தொண்டுசெய்ய நின்ற துறவியர்க ளேயருளைக்
கண்டுகொள்ளக் கண்டார்"

எனக் குணங்குடியாரும் கூறுவது காண்க.

## குரு தரிசனம்.

தார, புத்திர, தன, எடணைகளால் வலைப்பட்டுழலுகின்ற மான்போற் பாதவித்து அவ்வலையை அறுத்துக்கொண்டு எடுபட்டு ஓடுகின்ற மானைப்போல எடணையாகிய மூவாசை வலையை அறுத்துக்கொண்டு ஆசிரியரைத் தேடி ஓடுபவன் அகத்துள் அன்பும், புறத்துள் ஆராதனைக்குரிய வஸ்துக்களும் கொண்டு செல்லுமிடத்து அவ்வாசிரியர் இருக்கும் இடத்தில் திருவருள் கூட்டக்கூடி குருபரனைக்கண்டு வணங்குவன். இதனைக் கைவல்யத்தாரும்,

"ஆனவிம் மனைவி மக்க ளர்த்தவே டணைகள் மூன்றிற்
கானவன் வலையிற் பட்டுக் கைதப்பி யோடு மான்போற்
போனவன் வெறுங்கை யோடு போகாத வண்ணஞ் சென்று
ஞானசற் குருவைக் கண்டு நன்றாக வணங்கி னானே"

என்றருளினர்.

## குரு பூசை.

குருதரிசனம் கிடைக்கப்பெற்ற முமுக்ஷுவானவன் குருபரனுக்கு அபிஷேக ஆராதனை முதலிய சோடசோபசாரமுஞ் செய்து குருபரனின் சந்நிதானத்தில் தண்டாகாரமாகவிழுந்து நெற்றி பூமியிற்படவைத்து கை இரண்டையும் நேரே நீட்டி வலதுகையை முன்னும் இடதுகையைப் பின்னுமாக மடக்கி, அரையை நோக்க நீட்டி, வலதுபுஜமும் வலதுசெவியும் பூமியிற் படச்சாய்த்து, பின்னும் இடதுபுஜமும் இடதுசெவியும் பூமியிற் படச்சாய்த்து, மோவாயும் நெற்றியும் பூமியிற்படவைத்து, முன்போல் கையை நேரே நீட்டி அஷ்டாங்க நமஸ்காரம் அதாவது

நெற்றி, கை இரண்டு, செவி இரண்டு, புயங்கள் இரண்டு, மோவாய் ஆகிய எட்டுறுப்பும் நிலத்திலே தோயும்படி மூன்று முறை வணங்கி எழுந்து முழந்தாளிரண்டையும் பூமியிற்பட வைத்து மண்டியிட்டு உள்ளங்கை இரண்டும் நெற்றியும் பூமியிற் படவைத்துப் பஞ்சாங்க நமஸ்காரம் ஒருமுறை செய்து எழுந்து சிரமேற்கரங்குவித்து அஞ்சலியஸ்தராய் நின்று மனம்நெக் குடைய சரீரம் உரோமாஞ்சங்கொள்ள உண்ணடுக்குற நாத்தழு தழுப்ப கண்களினின்றும் ஆனந்த பாஷ்பம் பொழியக் குருபா னின் பெருமையை வியந்து,

"கருணைநெடுங் கடலென்கோ கல்லாலி னடியமர்ந்த
கடவு ளென்கோ
அருணைநகர் தனிலன்பர்க் கருள்கொடுக்கு மருளென்கோ
வமுத மென்கோ
மருணலிய வருபிறவி மருந்தென்கோ வடியேன்கண்
மணியென் கோமெய்த்
தெருணிறைந்த சிவகுருவே நின்றனையீண் டெவ்வாறு
சிந்திக் கேனே"

என வாயாரத்துதித்து,

"தூளேறு தூசுபோல் வினையேறு மெய்யெனுந்
தொக்கினுட் சிக்கி நாளுஞ்
சுழலேறு காற்றினிடை யழலேறு பஞ்செனச்
சூரையிட் டறிவை யெல்லாம்
நாளேற நாளேற வார்ததிகமெ னுங்கூற்றி
னட்பேற வுள்ளு டைந்து

நயனங்க ளற்றதோ ரூரேறு போலவே
நானிலந் தனி லலைந்தேன்"

இனிமேல் வருவதாகிய,

"வஞ்சநமன் வாதனைக்கும் வன்பிறவி வேதனைக்கும்
அஞ்சி யுனையடைந்தே னையா"

எனத் தொழுது,

"பண்ணுரு மிசையினொடு பாடிப் படித்தருட்
பான்மைநெறி நின்று தவருப்
பக்குவவி சேடராய் நெக்குநெக் குருகிப்
பணிந்தெழுந் திருகை கூப்பிக்
கண்ணுறு கரைபுரள நின்று...
..........................."

குருபரனின் திருவருளை எதிர்பார்த்துப் பணிசெய்யுமிடத்து ஆசிரியர் மனம்போல நடந்து கரசரணங்களாற் செய்யும் பணிவிடைகளைத் தவிராதுசெய்து தினந்தோறும் கண்ணை இமை காப்பதுபோல குருபரனையும் அவருக்குரித்தாகிய ஆச்சிரமமுதலிய பொருள்களையும் பாதுகாத்து குருவே சிவமெனும் சத்திய புத்தியால் அவர் திருவருள் சுரக்குமளவும் எதிர்பார்த்து வருடம் பனிரண்டு சென்றாலும் தன் மனம் வேறுபட்டு அவ்விடத்தைவிட்டு நீங்காது குருபரனுக்கு ஆப்த, அங்க, தான, சத்பாவமென்னும் நான்கு பணிகளும் குறைவின்றி இடைவிடாது செய்து சகல சாஸ்திர சம்பன்னாய் ஆராய்ந்து மாணவாதனைக்கு அச்சமூற்றுக் குருசந்நிதானத்தைவிட்டு நீங்காதிருப்பன். இவ்

வுண்மையை மேலோரும்,

"குருபரனுக்கவ னெஞ்சகம்போலனு கூலத்தனாய்க்
காசாரணுதியி னேவல்செய்தே தினங் கட்கிமைபோ
லுரியமனேமுத லியாவையுங்காத் துண்மை யாயொருதற்
பாமிவனேயெனக் காண்பான்சற்சீடன் பகர்ந்திடினே"

"நன்றுடனே சதாகாலங் காத்திருந்து
நலமாக வவர்மனமும் வருகுமட்டுஞ்
சென்றிடவே வருடமது பனிரெண்டுந்தான்
சென்றாலு மனம்வெறுத்துச் சென்றிடாமற்
பன்றுடனே வாய்மொழிக்குப் பதில்கூறுமற்
பதிவாகப் பார்த்திருந்து பட்சமாகக்
கொன்றைமலர் தானுமெடுத் தர்ச்சித்தேதான்
கோலமறைக் குருபதத்தைப் போற்றுவாயே

போற்றியே யஞ்சலிகள் மிகவும்செய்து
பொருந்திடவே யவர்மனமும் புண்ணுகாமல்
நேற்றியாய் மனதுவர நடந்துகொண்டு
நேர்மையுடன் சகலகலை தானறிந்து
கூற்றன்வந்து கூப்பிடுவான் என்றுஏங்கிக்
கூர்மையுடன் குருபதத்தைப் போற்றிசித்தந்
தோற்றமுடன் சதாகாலங் காத்திருந்தாற்
றுன்பமதைப் போக்குதற்குத் துறைசொல்வாரே"

எனக்கூறியது காண்க.

இவ்விதம் பணிசெய்துநிற்கும் சீடனது தீவிர பக்குவத்திற் கிரங்கிய குருசுவாமிகளும் அவனை ஆட்கொள்ளத் திருவுளம்

கருதி அவனுக்கு சக்ஷுதீக்ஷைசெய்து திருவடிசூட்டி பிர்மத் தியானமாகிய சகுணோபாசனையை ஆந்தரபரோக்ஷமாக உபாசிப்பதற்கு ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை அருளுவர்.

## சகுணோபாசனை.

பிர்மம் நிஷ்களவடிவமாகவும், சகளவடிவமாகவும் விளங்கும். இதில் நிஷ்களம் ஏகவடிவாகிய அரூபவடிவமாம். சகளம் அனேக வடிவாகிச் சிவலிங்கமூர்த்தியாயும் திருநீறுஞ் சடைமுடியும் தரித்தமூர்த்தியாயும், உமாதேவிபாகராயும், நிர்த்த சொரூபியாயும் விளங்குகின்ற வடிவங்களாம். இப்படிப் பிண்டாண்ட பிர்மாண்டங்களிலும் அகத்தும் புறத்துமாக பாலில் நெய்போலும், எள்ளுக்குள் எண்ணைபோலும் விளங்கிநிற்கும் நிஷ்கள சகள வடிவங்களில் நிஷ்களம் வெட்டவெளியாக இருப்பதனால் அதனை இன்னவிதமென்று நிர்ணயித்தற்கு அது திரிபுடி தோற்றமற்றவிடத்துப் பெறுவதாகும். இதனை,

"வெறுவெளி நிராலம்ப நிறைசூன்ய முபசாந்த
வேதவே தாந்த ஞானம்
பிரியாத பேரொளி பிறக்கின்ற வருளருட்
பெற்றோர்கள் பெற்ற பெருமை
பிறவாமை யென்றைக்கு மிறவாமை யாய்வந்து
பேசாமை யாகும்"

எனத் தாயுமானாரும்,

"வெந்துயரைத் தீர்க்குமந்த வெட்டவெளி கிட்டாதோ"

எனப் பட்டினத்தடிகளும், விளக்கியருளினர்.

ஆதலின்,

ஆரம்ப அப்பியாசிகளுக்கு நிர்க்குணோபாசனை செய்ய இயலாது. ஆனதால் சகளவடிவங்களை ஆந்தர அபரோக்ஷ ஞானத்தால் அறிந்த பெரியோர்களது திருவாக்காகிய இலக்கண சுருதிகட்கு இலக்கியமாகச் செய்திருக்கும் சித்திரங் களையும் விக்ரஹங்களையும் பாகிய அபரோக்ஷமாக அறிந்து காயிகம், வாசிகங்களால் வணங்குவது பாகிய அபரோக்ஷ சகுணோபாசனையாகும்.

## ஆந்தரபரோக்ஷ சகுணோபாசனை.

பாகிய அபரோக்ஷமாக அறிந்த மூர்த்திகளில் ஒன்றை ஆந்தரத்தி லபரோக்ஷமாக நினைத்து அம்மூர்த்திகளின் திரு நாம எழுத்துக்களாகிய ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தைச் சாஸ்திரமூலமாய் அறிவதினும் சற்குருமூலமாய்ச் சந்தேகமறத்தெளிந்து தம் உபாசனாமூர்த்தியைப் புருவமத்தியில் நிறுத்தி மௌனமாக இருந்து செபிப்பது மானத பூசையாகிய ஆந்தரபரோக்ஷ சகுணோபாசனையாகும்.

## ஆந்தர அபரோக்ஷ சகுணோபாசனை.

இவ்விதம் ஆந்தரபரோக்ஷ சகுணோபாசனையில் முதிர்ச்சி யடைந்த பக்குவர்களுக்கு அவ்வாந்தரபரோக்ஷ சகுணோபா சனையை அபரோக்ஷமாக அறியும்படி அருளுதற்குத் திருவுளங் கருதிப் பலவித சோதனைகளாலும் சீடனைப் பரீக்ஷிக்குமிடத்து அவன் அந்தச் சோதனைகளுக்குத் தவறிப்பின்னிடாது

"யாது நல்லன்பர் கேட்கினு முதவுறு மியல்பும்
மாதவத்தினோ சொறுப்பினும் வணங்கிடு மகிழ்வும்"

என்றதற்கிலக்காய் நின்றும் சுவர்ணமானது புடத்திற்குப்புடம் மாற்றேறுவதுபோலவும் முன்னினும் அதிக விருப்பமுடைய வனாய்ப் பணிசெய்து ஆசிரியரது அருளை எதிர்நோக்கி நிற்பன். இத்தகைய அதி தீவிர தரமுடைய சீடனது பக்குவத்தை உணர்ந்த பரமாசிரியரும் அம்மாணாக்கனைத் தன்னருகழைத்து அஸ்த மஸ்தக சையோக ஆலிங்கனஞ்செய்து பஸ்மகவசம் தரித்து திருவடி சூட்டி தன்னருகிருத்தி அபரோக்ஷ அத்துவித மோன ஞானத்தை அடைதற்கு ஏதுவாகிய பிராணாயாமமுறை யைத் தெக்ஷிணாமூர்த்தமாக யோகாசனத்திருந்து நவத்துவாரங் களுக்கும் சின்முத்திரையிட்டுக்காட்டிச் சுழிமுனை வில்லைப்பூட்டி பத்தாவது வாசலில் சுவாசத்தையோட்டி மௌனாக்ஷரத்தை அருளிப் பூரககும்பகரேசக மாத்திரைகளை குறிப்பாலுணர்த்திக் கற்பமுறையையும், அன்னபானாதிகளின் பாகபத்தியங்களையும் அருளுவர்.

இவ்விதமாக அநுக்கிரஹிக்கப்பட்ட சீடன் அவ்வாசிரியரது அங்கஸ்பரிசத்தால் கற்பழிந்து செம்பானது பரிசவேதியால் களிம்பு நீங்கிக் கனகமாவதுபோல சீடனது மும்மலங்களும் நீங்கி ஞானமயனாகுவன். இதனை,

"பேதமில்லதோர் கற்பழித்த பெருந்துறைப்பெரும் பித்தனே"

"கன்னியழித்தாண்டி கற்பைக்குலைத்தாண்டி"

"கருமருவு குகையனைய காயத்தி னடுவுட்
களிம்புதோய் செம்பனைய யான்
காண்டக விருக்க நீ ஞானவனன் மூட்டியே
கனிவுபெற வுள்ளுருக்கிப்

பருவமத றிந்துநின் னருளான குளிகைகொடு
பரிச்சித்து வேதிசெய்து
பத்துமாற் றுத்தங்க மாக்கியே பணிகொண்ட
பக்ஷத்தை யென்சொல்லு கேன்"

என எழுந்த திருவாக்குகளாலுணர்க.

ஞானோபதேசம் பெறுமுறை, இவ்விதமிருப்பதை உணராது சில பேர்கள் குரு உபதேசிப்பது யோகமல்லவென்வும் மூச்சைப் பிடிப்பதனால் பிரயோசனம் என்னவென்றும் விதண்டாவாதம் பேசுவர். இவர்கள் நமது முன்னோர்களாகிய புசுண்டர் முதலாகிய சித்தர்களும் சமயாச்சாரியர் முதலிய பக்தர்களுமாகிய சிவானு பூதிச்செல்வர்கள் யாவருக்கும் பரமேஸ்வரனாலும், பரமாச்சாரி யர்களாலும், அனுக்கிரஹிக்கப்பெற்ற சுவானுபவ மார்க்கம் யோகமென்பதை உணராதவராவர்.

இவர்கள், அவ்விதம் உண்மையை உணராததற்குக்காரணம் யாதோவெனின், செல்காலமுதல் நிகழ்காலம்வரையிலும் உண்மை யனுபவத்தையுடைய ஞானிகள் சிலரும் அனுபவமார்க்கத்தை உணராத வாசகஞானிகள் பலருமாக இருந்ததினால் அவர்கள் தங்களது வாசகஞான அறிவிற்குத் தக்கவாறு தாம் கற்றவாசக ஞானமே உண்மையாகிய சுவானுபவ ஞானமாகும் எனப் புராண சாரமாக எழுதிய நூல்களை தற்காலமுள்ளவர்களுமுணர்ந்து உண்மையான சுவானுபவ மார்க்கத்தை உணர்ந்த பெரியோர்க ளது திருவாக்காகிய நூல்களுக்கு விரோதமாக அனேக உதா ரணங்களை எடுத்துக்காட்டி உண்மையை உணரவிடாது செய்த னர். அப்படிச் செய்ததற்கு முன்னூல்களாகிய புராணங்களும்

இதிகாச முதலியவைகளுமே காரணமாகும். இதுபற்றியே தாயுமானாரும்,

"வாசகத்தின் ஞானமெல்லாம் வந்ததுபோற் பேசியையோ
மோசப்படுத்தன் முறையோ பராபரமே"

என இரங்கினர்.

இனி நம் பெரியோர்கள் சிவானுபூதிச்செல்வத்தைப்பெற்ற சுவானுபவ மார்க்கம் யோகமென்பதையும் அதனைக் குரு அனுக்கிரஹித்த முறையையும் வெள்ளிடைமலையெனத் தெள்ளிதிற் கூறிய அவர்களது சுவானுபவத் திருவாக்குகள் பின்வருமாறு காண்க.

"கண்மாய மிட்டாண்டி கருத்து மிழந்தேண்டி"

"பாலின்க ணெய்பிருந் தாற்போலப் பரஞ்சோதி
யாலிங்க னஞ்செய் தறவிழுங்கிக் கொண்டாண்டி"

"முன்னீறுமாதியு மில்லான் முனிவர்குழாம்
பன்னூறு கோடியிமை யோர்கடா நிற்பத்
தன்னீறெனக் கருளி"

"ஐய மறுத்தவனை ஆராய்வா ருண்டானல்
வையகத்தே வந்து மலர்ப்பாதம் வைத்திடுவான்"

"இணையார் திருவடி என்றலைமேல் வைத்தலுமே
துணையான சுற்றங்க ளத்தனையுந் துறந்தொழிந்தேன்"

"கல்வியல்ல கேள்வியல்ல கைகாட்டுங் காரணங்காண்"

"தாக்கும் சுழிமுனை வில்லைப்பூட்டவும்"

"ஓங்கார வீடு கிடைக்கு—மத
னென்பது வாசலு மொக்க வடைக்கும்"

"வாச லீரைந்தில் மயங்கிய வாயுவை
ஈசன்றன் வாசலி லேற்று"

"கற்பமுறை கையிற்காட்டும்"

"பிரியாத தண்ணருட் சிவஞானியாய் வந்து
பேசரிய வாசியாலே
பேரின்ப வுண்மையை யளித்தனே"

"ஆகார புவனமின் பாகாரமாக வங்ஙனே யொருமொழியா
லகண்டாகார
யோகானு பூதி பெற்ற வன்பராவிக்குறு துணையே"

"..............................மோன
மூர்த்தி வடிவாயுணர்த்துங் கைகாட்டுண்மை
முற்றியென தல்லல்வினை முடிவதென்றோ"

"காசினியெலா நடந்து காலோய்ந்து போகாமல்
வாசிதனிலேறி வருவதினி யெக்காலம்"

"வாசிதனிலேறி மகிழ்ந்துனைத்தான் போற்றுமற்
காசிவரை போய்த் திரிந்துங் காலலுத்தேன் பூரணமே"

"செயமாகா நெஞ்சே திருட்டு மலக்கோட்டை
பயமறவே வெட்டிப்பரப்பி—நயமான
வாசியினாற் சுட்டொடுக்கி மதிமயக்கம் கொண்டிருப்போம்
பேசியு நாம் பேசாமலே"

"தையலார் மையலிலே தாழ்ந்துவிடக் கடவேனைப்
பையவே கொடுபோந்து பாசமெனுந் தாளுருவி
யுய்யுநெறி காட்டுவித்திட் டோங்காரத் துட்பொருளை
யையனெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே"

"மாயவாழ்க்கையை மெய்யென்றெண்ணி
மதித்திடாவகை நல்கினான்
வேயதோளுமை பங்கனெங்க
டிருப்பெருந்துறை மேவினான்
காயத்துள்ளமு தூறவூறநீ
கண்டுகொள்ளென்று காட்டிய
சேயமாமலர்ச் சேவடிக்கணஞ்
சென்னிமன்னித் திகழுமே"

"ஊனி லுயிர்ப்பை யொடுக்கி யொண்சுடர்
ஞான விளக்கினை யேற்றி நன்புலத்
தேனை வழிதிறந் தேத்து வார்க்கிட
ரான கெடுப்பன வஞ்செ ழுத்துமே"

"தானத்தைச் செய்து வாழ்வான்
சலத்துளே அழுந்து கின்றீர்
வானத்தை வணங்க வேண்டின்
வம்மின்கள் வல்லி ராயின்
ஞானத்தை விளக்கை யேற்றி
நாடியுள் விரவ வல்லாற்
கூனத்தை யொழிப்பர் போலு
மொற்றியூ ருடைய கோவே"

"நடந்து சித்ர நாடியிலே நாதமறி நெஞ்சே"

"தாமடா வாசியென்ற குதிரையேறித்
தத்துவந்தொண் ணூற்ருறு தனையறுத்து
ஓமடா ஓங்காரத் துள்ளொடுங்கி
ஓம்நமசி வாயவென்று மனதிற்றங்கி
நாமடா நமனுடையபட் டணமுந்தாண்டி
நாதாந்தச் சுடரிலே நாடிச்சென்று
வாமடா வாமத்தைக் கண்டுபோற்றி
வாலையெனும் பராபரையை மனதிற்றங்கே
தங்கியே மனதினிலே நினைவாய்த்தங்கி
தமர்திறக்கும் வாசலுட கதவுகண்டு
அங்கியே ஆறுதல மடுத்தேயேறி
ஆதிவஸ்தை அனுதினமும் உன்னுட்கொண்டு
எங்கியே யீராறு தலமுந்தாண்டி
இடகலையும் பிங்கலையும் அழியச்செய்து
பங்கியே பரமான நதியுந்தாண்டி
பச்சைமயி லேறியுந்தான் பாடுவாயே
பாடவே கின்னரியும் மாலின்வீட்டிற்
பகல்வத்தி தீவட்டி பகல்போற்ருேனும்
ஆடவே யைந்தெழுத்து மங்கேதோணும்
அப்பொழுதே சங்குதொனி அறிவாய்க் கேட்கும்
நாடவே தமர்திறக்கும் வாசல்தோணும்
நந்தியுடன் வீற்றிருக்கும் நட்புத்தோணும்
வாடவே வச்சிரமணி விளக்குத்தோணும்
வாலையுட சிலம்பொலியும் வாய்க்குந்தானே"

"சங்கோதை நாதமொடு கூடிவெகு மாயைஇருள்
வெங்தோட மூலவழல் வீசஉப தேசமது
தண்காதில் ஓதியிரு பாதமலர் சேரவருள் புரிவாயே"

இரவு பகலற்ற ஞான தரிசனத்தை அடைந்தவர் யாவரும் சென்றது ஏகமார்க்கமேயன்றி அனேக மார்க்கமில்லையென்பதை மேலோர்களது சுவானுபவத் திருவாக்குகளாலும் தம்முடைய சுவானுபவத்தாலும் உணர்ந்தே ஸ்ரீ தாயுமானவரும்,

"கங்குல் பகலற்ற திருக்காட்சியர்கள் கண்டவழி
யெங்கு மொருவழியே யெந்தாய் பராபரமே"

எனக் கூறியதுங் காண்க.

அத்துவிதானுபவ அபரோக்ஷ ஞானத்தை ஞானசிரியரால் அனுக்ரஹிக்கப்பெற்ற பக்குவர்கள் ஆச்சாரியத் தன்மையை யடைந்து கற்பசாதனம் பழகுதற்கு தகுந்த இடம் பொருள் ஏவலை குருநாதரது கிருபையால் கிடைக்கும் காலத்தை எதிர்பார்த்து என் ஞான நாயகனே நின்மோன ஞான நாட்டமுற்று வாழ்ந்திருக்கும் நாள் என்னுளோ என்னும் மானத பூசையோடு பக்தியினால் "என் நெஞ்சமய்யா தீயுண்டிருந்த மெழுகல்லவோ கதி சேர்வதற்கே" என்றதற்கிலக்காய்க் கரைந்து கரைந்து உருகியும் அனுபவ நூல்களை ஆராய்ந்தும் இறைவனருளை எதிர்பார்த்திருக்கவேண்டும். அப்போது பூர்வம் விட்டகுறைவந்த காலத்தில் இறைவனருளால் ஏகாந்தமான இடமும், பத்திய பாகங்களுக்கும் பிறரை எதிர்பாராது செய்யத்தகுந்த பொருளுடையவர்களாகவும், நிழல்சாயைபோல குருவைத் தொடர்ந்து நின்று கண்ணை இமை காப்பதுபோல காப்பாற்றத்தகுந்த சீடர் குழாங்

களும் கிடைக்கும். அப்போதுதான் சாதனம் பழக இயலும். அவ்விதமன்றி மன அவசரத்தால் தகுந்த வசதிகள் இல்லாத போழ்து சாதனம் பழகின் உடம்பிற்குத் தாங்கமுடியாத சங்கடங்கள் நேரும். அப்படி நேர்ந்தபின்னல் உடம்புவேண்டாங் கையைவிடுவென்றாலும் விடாத சங்கடம்போல மரணபரியந்தமும் மாற்றமுடியாத துன்பமாகும். ஆயினும் தவத்தினல் வருந் துன்பமும் நன்மையே யாகுமாயினும் முறையோடு பழகுவது இலகுவாயிருக்கும் என்பதுபற்றியே கூறியதாகும். ஆகவே குருநாதரது கிருபையால் இடம், பொருள், ஏவல் முதலியவை கிடைத்தகாலத்து இடம், பொருள், ஏவலுடனே பிராணயாமம் செய்யும்போது தினந்தோறும் கற்பம் அருந்திக்கொண்டேயிருந்து பிராணயாமம் செய்வது முறையாகும். அவ்விதம் கற்ப முறையை அநுஷ்டிப்பதற்கு அன்னையின் அருள்வேண்டும். அவள் அருளின்றேல் கற்பங்கிடைப்பதரிதாகும். கற்பமின்றேல் காயசித்தியின்றாம். காயசித்தியின்றேல் யோகசித்தியின்றாம். யோகசித்தியின்றேல் அதன் முடிவிற்பெறுவதாகிய ஞானநிலை கிட்டவே கிட்டாது. ஆதலின் தாயைப் பூசித்து, அவள் அருளைப்பெறுது யோகம்பண்ணுவோர்க்கு தேகம் வியோகமாவதன்றி யோகத்தை அடையார். இவ்வுண்மையை,

"நில்லடா மும்மூலங்கொண்டு தானு
நிலையானவாசியைத் தானினைத்துப் போற்று
அல்லடா கற்பமுந்தான் கொள்ளாமற்றான்
அறிவானவாசியைத் தானேற்றி னக்கால்
மெல்லடா தேகமுந்தான் வெடித்துப்போகு
மேன்மையுள்ள வாசியுந்தான் குதித்தேயோடும்

வல்லடா வல்லவனுய்க் கற்பங்கொண்டு
வாய்வான வாசியைத்தான் வாங்குவாயே"

"பாரப்பா செகதலத்தி லோடினாலும்
பஞ்சவர்ணக் குட்டிகளைப் பணிந்திட்டாலும்
ஆரப்பா தீர்த்தங்க ளாடினாலும்
அடிமுடியு மரன்பாத மறிந்திட்டாலும்
நேரப்பா மும்மூலங் கொள்ளாதார்க்கு
நிச்சயமாய்ப் பரகதியுங் கிட்டாதப்பா
காரப்பா மும்மூலக் குருவுதன்னைக்
கண்டாக்காற் கடைத்தேறிக் கொள்ளுவாயே"

எனச் சுப்பிரமணியர் ஞானத்திலும்,

"ஆமடா இவளைவிட்டு யோகம்பெற்று
ரறிந்ததில்லை யொருநாளும் ஞானப்போச்கு
ஓமடா வாராது முத்தியில்லை
ஒழியாது மரணமது ஒருநாளுந்தான்
நாமடாஇவளை முந்தியர்ச்சித் தேத்தி
நலமாகப் பனிரண்டு வளையுந்தாண்டிக்
காமடா மனவளையுந் தாண்டியேறக்
கற்பசித்தி யோகசித்தி கடாட்சித்தாளே"

எனக் குருராசரும்,

"தாயுடன் சென்றுபின் தாதையைக் கூடிப்பின் தாயை மறந்
தேயுமதே நிட்டையென்று ளெழிற்கச்சி யேகம்பனே"

எனப் பட்டினத்தடிகளும்,

"வாயுண்டு வாழ்த்தமௌனஞ் செய்போது மௌனவருட்
டாயுண்டு சேயென்ன"

எனத் தாயுமானவரும்,

"தாயை—வாமம்வைத்துப் பூசைபண்ணிப் பணிந்திட
வாரியமிர்தத்தை யூற்றும்"

எனக் குணங்குடியாரும் கூறினர்.

அன்னையின் அருள்பெற்றுக் கற்பசாதனம் பண்ணுவோர் ஆகாரம் உண்பது உறைப்பு, புளிப்பு, கைப்பு, கசப்பு முதலிய காரசாரமுள்ள பதார்த்தங்களை உண்ணாது கடுகு, நல்லெண்ணை துளியேனும் சேராது நீக்கிவிட்டு கருங்குறுவை நெற்பச்சரிசியும் பாசிப்பருப்பும் சமமாகக்கலந்து நல்ல தண்ணீரில் வைத்துப் பொங்கி ஆவின்பால் விட்டுக்கடைந்து சிறிது சர்க்கரைபோட்டுக் காலை மாலை இரண்டுவேளை புசிக்கவேண்டும். ஆவின்பாலில் நற்சீரகம், மிளகு, வாதாம்பருப்பு இவைகளை அரைத்துப் பசுவின் வெண்ணெய் போட்டுக்காய்ச்சி உடம்பிற் சூடு நீங்கத் தேய்த்துக்குளிக்கவேண்டும். இவ்விதம் பதின்மூன்று வருடமட்டும் கற்பமுறையோடு யோகசாதனம் பண்ணினால் காயசித்தியும், யோகசித்தியும் உண்டாகும். அங்ஙனம் அஷ்டாங்க முடிவாகிய சமாதிநிலைகூடும். அவ்விடத்துண்டாகும் ஆந்தரா பரோக்ஷ ஞானத்தால் அத்துவித முத்திநிலை சித்திக்கும். இவ்வுண்மையை,

"ஏறடா பதின்மூன்று வருடமுந்தா
னென்மகனே மும்மூல மெண்ணிக்கொண்டு"

எனச் சுப்பிரமணியர் கூறியவற்றாலுணர்க.

## அஷ்டாங்கமாவது.

இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்யாகாரம், தாரணை, தியானம், சமாதி என்னும் இவைகளாம். இவற்றுள்,

### இயமம்.

"கொல்லான் பொய்கூறான் களவிலா னெண்குண
நல்லான் அடக்க முடையா னடுச்செய்ய
வல்லான் பகுத்துண்பான் மாசிலான் கட்காம
மில்லா னியமத் திடையினின் றானே"

### நியமம்.

"தூய்மை அருளூண் சுருக்கம் பொறைசெம்மை
வாய்மை நிலைமை வளர்த்தலே மற்றிவை
காமங் களவு கொலை யெனக்காண்டவை
நேம மீரைந்து நியமத்தனாமே"

### ஆசனம்.

பதுமம், வீரம், சிங்கம், குக்குடம், கோமுகம் முதலிய பல ஆசனங்களுள் கோமுகாசனம் ஒன்றே பொருத்தமாகும்.

### பிராணாயாமம்.

நவத்துவாரங்களிலும் சின்முத்திரையிட்டுப் பத்தாவது வாசலில் சுவாசத்தைச் செலுத்துவதாகும். இவ்விதம் பத்தாவது வாசலாகிய சுழிமுனை வாசலில் சுவாசத்தைப் பூரிக்கும் வகையை அந்நிலையை உணர்ந்த ஆச்சாரியர் மூலமாகவே உணரவேண்டும்.

## பிரத்யாகாரம்.

ஊனக்கண்ணால் பிரபஞ்சத்தையறியும் பகிர்முகோபாதியை நீக்கி ஞானக்கண்ணால் அந்தர்முக நாட்டமுறுவதாகும்.

## தாரணை.

பிராணவாயு சித்திரநாடியில் புகுந்து ஆறுதாரப் பூட்டுகளைத் திறந்து வழிகாட்ட சீவன் அந்தக்கரண முதலிய 34 தத்துவங்களுடனே கூடி ஆறுதாரங்களிற்சென்று உலாவுவதாகும்.

## தியானம்.

ஆறுதாரங்களைக் கடந்து மேலாலவஸ்தை ஐந்தில் சாக்கிரம், சொற்பனம், சுழுத்தி என்னும் மூன்றவஸ்தையையும் கடந்த துரியநிலையில் ஜீவன் பிராணவாயுவுடன்சென்று நடராஜமூர்த்தியின் நிர்த்ததரிசனம் காண்பதாம். இதனை இராமலிங்கசுவாமிகளும்,

"துரியமலை மேலுளதோர் ஜோதிவளநாடு
தோன்றுமதி லையர் நடஞ் செய்யுமணிவீடு"

எனவும்.

"சொருபமறிந்தவர் யாரோ பார் மிசை
சருவபரம்பரை யோகி நீயறி"

எனப் பதஞ்சலிமுனிவரும் கூறியது காண்க.

## சமாதி.

யோகிகளுக்கு பதின்மூன்றுவது வருடத்திற்கு மேல்துரியாதீதத்தில் ஜீவன் சகலாவஸ்தையை நீங்கி கேவலாவஸ்தையை

யடைவது சமாதிநிலையாகும். இந்தச் சமாதியும் சவிகற்பசமாதி நிர்விகற்பசமாதி என இருவகையாகும். இவற்றுள் சவிகற்ப சமாதியாவது புளியங்காயும் தோடும்போல தேகப்பற்றுடனே இருப்பதாகும். நிர்விகற்பசமாதி புளியம்பழமும் தோடும்போல தேகப்பற்று நீங்கி இருப்பதாம். இந்நிலையை அடைந்தவர்க்குச் சுவாசம் வெளியேறாது அடங்கும். இதனை,

"மூச்சப்பா வோடாது பிர்மாதீத முத்திபெற்றேன்
மூச்சுலயப் படுவதல்லோ பிர்மநிஷ்டை"

எனப் புசுண்டரும் கூறியதுகாண்க.

நிர்விகற்பசமாதி நிலையை அடைந்தவர்களது தேகம் பிணவியல்பாகி மண்ணில்விழாது கைலாயதேகமாகி அரூபசித்தி, உருவசித்தி, அரூபாரூபசித்தி என்னு மூன்றில் ஒரு சித்தியைப் பெறும். அங்ஙனம் சீவன் முத்தியுண்டாம். இதற்குச் சான்றாகச் சுந்தரமூர்த்தி நாயனார் வெள்ளையானையின்மீதும் சேரமான் பெருமாணாயனார் குதிரையின்மீதும் ஆரோகணித்துச்சென்று உருவசித்தியையும் நந்தனார், திருஞானசம்பந்தர், மாணிக்கவாசகர் முதலியோர் சோதியிற்கலந்து அரூபசித்தியையும் திருநாவுக்கரசர், திருவெண்காடர் முதலியோர் சிவலிங்கத்திற் கலந்து அரூபாரூப சித்தியையும் பெற்றனரென்பதை அவர்களின் சரிதவாயிலாக யாவரும் நன்கு உணர்ந்ததேயாகும். இவ்வுண்மையை உணர்ந்தே தாயுமானாரும்,

"தேகமியா தேனுமொரு சித்திபெறச் சீவன்முத்தி
யாகுநெறி நல்லநெறி யைய்யாப ராபரமே

முத்தியிலுந் தேகமின்சை மூவிதமாஞ் சித்திபெற்றோ
ரெத்தனைபே ரென்றுரைப்ப தெந்தாய்ப ராபரமே"

என்று முத்திமார்க்க இயல்பைப் புலப்படுத்தி இதனை அடைந்தவர்கள் இத்தனை பேரென்பதை வரையறுத்துக் கூறமுடியாதெனவும் விளக்கியருளினர்.

மோக்ஷத்தை அடைய விரும்புகின்ற முமுக்ஷுக்கள் யாவரும் உண்மை ஞானத்தைத் தருவதாகிய யோகானுபவ நூல்களை ஆராய்ந்தும் யோகானுபவிகளை வழிபட்டும் அதன் முடிவிற் பெறுவதாகிய ஆன்மஞானத்தைப் பெறவேண்டியது அவசியமாகும். அங்ஙனமாவதற்கு உண்மை ஞானானுபவத்தை உணர்ந்த ஞானிகளது தெரிசனம், பாவங்குறைந்து புண்ணியமேலிட்ட ஆன்மாக்களுக்கு ஈஸ்வரானுக்கிரஹத்தால் கிடைப்பதாகும். இதனை தாயுமானார்,

"இடத்தைக் காத்திட்ட சுவானெனப் புன்புலால் யாக்கைச்
சடத்தைக் காத்திட்ட நாயினே னின்னன்பர் தயங்கு
மடத்தைக் காத்திட்ட சேடத்தால் விசேடமாய் வாழ
விடத்தைக் காத்திட்ட கண்டத்தோய் நின்னருள் வேண்டும்

உய்யும்படிக்குன் றிருக்கருணை யொன்றைக்கொடுத்தா லுடையாய்பாழ்
பொய்யு மவாவு மழுக்காறும் புடைபட் டோடு நன்னெறியா
மெய்யு மறிவும் பெறும்பேறும் விளங்கு மெனக்குன் னடியார்பாற்
செய்யும் பணியுங் கைகூடும் சிந்தைத் துயரந் தீர்ந்திடுமே"

என வேண்டியதே நன்குணர்த்துகின்றது.

ஆனால் ஞானிகள் உலகத்தில் சஞ்சரிக்குமிடத்து உத்தமர், மத்திமர், அதமர் ஆகிய மூவகையோரும் காண்பார்களேயெனின்

ஞானிகளது தெரிசனத்தை யாவரும் பெற்றாராயினும் அவருக்கு ஆப்த, அங்க, தான, சற்பாவமென்னும் நான்கு பணிவிடைகளும் குறைவின்றிச்செய்து அவரது பரிசனம் பாதோதகம், பரிகல சேடப்பிரசாதம், ஞானோபதேச முதலியவற்றை அவரால் அனுக்கிரஹிக்கப்பெற்றவரே ஞானிகளது தெரிசனத்தை ஈசுரா னுக்கிரஹத்தாற் பெற்ற உத்தமராவர். ஈசுரனால் வெறுக்கப் படாதவரும், விரும்பப்படாதவருமாகிய மத்திமர் ஞானிகளது தெரிசனத்தைப் பெற்றாலும் அவரனுக்கிரஹத்தைப் பெறுதற் குரிய நன்மையைச் செய்யார். அங்ஙனம் நன்மையைச் செய்யா திருப்பரேல் அதுவே பெரிய தீமையாகும். ஆகவே அதமர்கள் ஞானிகளது தெரிசனத்தைப் பெற்றாலும், அவராற் பெற வேண்டியவற்றில் ஒன்றேனும் பெறுதற்குத் தகுதியில்லாதவ ராக ஆனதுமன்றி ஞானியாது மனம் சலனமடைதற்கு ஏதுவாக அவருக்கு இடையூறு செய்வதே தமக்கு அவசியத்தொழிலாக இடைவிடாது தினந்தோறும் செய்வர். இதனை மேலோரும்,

"தனையறியா ரீசன் றனையார் பாச
வினையறியா ரானந்த மேவார்—தனையறியுஞ்
சிட்டர்தமக் கில்லாத் தீங்குரைப்பர் பொல்லாத
துட்டர்தமக் குள்ள தொழில்"

எனப் பாவிகளது செய்கையை முற்றும் விளக்கியருளினர். ஆகவே ஞானிகளது தெரிசனத்தால் உத்தமர்கள் புண்ணியத் தைச்செய்து பிறவியற்ற மோக்ஷத்தை அடைவர். மத்திமர், அதமர் முதலியோர் பெரியோரை மனம் நோகச்செய்து அதனால் யாவரும் பழித்தற்கு ஏதுவாகிய காசம், குன்மம், குஷ்டம்,

மகோதரம், பிள்ளை முதலிய பெருநோய்களுண்டாய் வருத்த அனைவரும் சீ! சீ! எனச் சிரிக்க அக்கினிவார்தையில் அகப்பட்டவன் வருந்துவதுபோல உழன்றுசெத்து மறுமையிலும் எரிவாய் நரகத்தழுந்துவர். இக்கருத்தை நமது சந்தப்பாவலரவர்களும்,

"அடியார்மனஞ்சலிக்க
எவராகினும்பழிக்க
அபராதம்வந்துகெட்ட பிணிமூடி

அனைவோரும்வந்துசிச்சீ
எனநால்வரும்சிரிக்க
அனலோடழன்றுசெத்து விடுமாபோல்"

என அறிவுறுத்தினர். இதனால் பெரியோர்களிடத்தில் எவ்விதத்திலும் குற்றத்திற்காளாகாது நடந்து அவரை நமக்குச் சுற்றத்தினராக செய்யத்தக்க நட்பையும் உண்டாக்கவேண்டியது நமது கடமையாகும். ஆகவே பெரியோர்கள் நம்மிடத்தில் சுற்றத்தினராக நட்புக்கொண்டு ஒழுகப்பெறுவது அரிதினுமரிதாம். இவ்வுண்மையை நாயனாரும்,

"அரியவற்று ளெல்லாமரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்"

என விளக்கியருளினர்.

ஆதலின் ஞானமார்க்கத்தை உணர்ந்த பெரியோர்களது திருக்கூட்டத்தில் புக்கி அவர்களின் அன்புக்கடலுட்டிளைத்தவர்க்கு உளதாகிய அரை குறை அறிவை நிறைந்த அறிவாக்கும். செல்வத்தையும் கொடுக்கும். பெரியோர்களது நட்பானது

சம்ஸாரக்கடலுள் வீழ்ந்தவர்களைக் கரையேற்றுவதற்குரிய தெப்பமாகும். அவருடைய நட்பினின்று எவ்விதத்தினும் நீங்காது அடைதற்கு முயலவேண்டும். இதனை,

"அறக்குறைவை நிறைவாக்கும் சம்பத்தாக்கும்
ஆபத்தைச்சுகமாக்கும் அசுபந் தன்னைச்
சிறக்குமுயர்ந்தவர் கூட்டமென்னுங் கங்கைச்
சீதநீ ராடினர்க்குச் செந்தீ வேள்வி
இறக்கரிய தவந்தானந் தீர்த்தம்வேண்டா
மிடர்பந்தந் தீர்த்தவர்க்கு மினியோ ராகிப்
பிறப்பெனும் வேலைப் புணையா யுணர்வுசார்ந்த
பெரியோரை எவ்வகையும் பேணல் வேண்டும்"

என ஞான வாசிட்டத்திலும் கூறியது காண்க.

## ஆச்சிரமம்.

ஆச்சிரமமாவது பிர்மசரியம், கிருஹஸ்தம், சந்நியாசம், வானப்பிரஸ்தம் என நான்காகும். இவற்றுள்,

### பிர்மச்சரியம்.

ஜெனனகாலமுதல் சிற்றின்பானுபவம் இல்லாதவரையிலும் பிர்மச்சரியமாகும்.

### கிருஹஸ்தம்.

"மறமலி யுலகவாழ்க்கையே வேண்டும் வந்துநின் னன்பர்தம் பணியாம் அறமது கிடைக்கின்................................"

என்பதை விரும்பி,

"பெண்ணிற் பெருந்தக்க யாவுளகற் பென்னுந்
திண்மை யுண்டாகப் பெறின்"

என்றதற்கிலக்காகிய பெண்ணை மணஞ்செய்து அங்ஙனம் மணஞ்செய்துகொண்ட சதி பதி இருவரும் கிருஹாச்சிரம நெறியில் நின்று,

"இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றி னின்ற துணை"

என்னும்படியாக பிர்மச்சாரி, சந்நியாசி, வானப்பிரஸ்தன் என்னும் மூன்றாச்சிரமிகட்கும் ஆப்த, அங்க, தான, சற்பாவமென்னும் நான்கு பணிகளையும் அவ்வவ்வாச்சிரமிகளுக்குத் தக்கமுறையோடு திரிகரண சுத்தியாய்ச் செய்வது கிருஹாச்சிரம முறையாகும்.

## சந்நியாசம்.

சந்நியாசம் மேலே கூறப்பட்டவர்களாகிய பிர்மச்சாரியாயினும், கிருஹஸ்தராயினும் ஆன்மஞானத்தைப் பெறுதற்கேதுவாகிய வழியறிவான்பொருட்டு உலக விவகாரங்களை அறவே விடுத்து ஞானாசிரியரைத் தேடிப்போய்க்கண்டு அவரிடத்து,

"தொண்டுசெய்ய நின்ற துறவியர்க ளேயருளைக்
கண்டு கொள்ளக் கண்டார்"

என்பதற்கிலக்காய் நின்று குருபணிசெய்வது சந்நியாசமாகும்.

## வானப்பிரஸ்தம்.

வானப்பிரஸ்தம் ஆச்சாரியனுக்ரஹம் பெற்றவர்கள் இடம் பொருள் ஏவலுடன் ஓரிடத்திருந்து பிராணாயாமஞ்செய்வது.

வானப்பிரஸ்தமாகும். கிருஹாச்சிரமத்தில் மனைவியுடன் கூடி யிருப்பவனேயாயினும் அவ்வாச்சிரம நெறியினின்றும் வழுவாது மற்றைய ஆச்சிரமங்கட்குரிய தொழில்களையும் முறையோடு புரிவானேல் அவன் பிர்மச்சாரி, சந்நியாசி, வானப்ரஸ்தன் ஆகிய மூன்றுச்சிரமிகட்கும் மேலாகிய அதிவருணச்சிரமியாவன். இதற்கு வசிட்டர், வள்ளுவர் முதலிய மகரிஷிகளே போதுமான சான்றுவர்.

## ஞானப்படிகள்.

சரியை, கிரியை, யோகம், ஞானம் என நான்காகும். இவற்றுள்,

### சரியை.

சிவசொரூபமாகிய சகளவடிவைப் பகிர்முகத்தில் அபரோக்ஷமாக அறிந்து வணங்குவதற்கு ஏதுவாகச் சிவசின்னந்தரித்தல், சிவஸ்தலங்கடோறும் சென்று ஆங்குள்ள கங்கை முதலிய நதிகளில் ஸ்நானம்செய்தல், திருநீறணிந்து திருக்கோயில் வலம் வருதல், திருவலகிடுதல், திருமெழுக்கிடுதல், திருவீதியில் புல் செதுக்குதல், திருநந்தனவனம் அமைத்தல், திருமலரெடுத்தல், திருமாலை தொடுத்தல், தீபமேற்றுதல், சிவலிங்கமூர்த்திக்கு நறுமணப்பொருள்களாய சந்தனம், புனுகு, தைல முதலியவற்றால் திருமஞ்சனமாட்டல், துகிலுடுத்தல், பன்மலர்களால் தொடுத்த மாலைகளால் அலங்காரம் செய்தல், வில்வ முதலிய பத்திரபுட்பங்களால் அர்ச்சித்தல், தூபதீப நைவேத்யஞ்செய்தல், இறைவனின் திருவருளை வியந்து மனமுருகி இன்னிசையோடு வாயார வாழ்த்துதல், சிவனடியார்கட்குத் திருத்தொண்டு செய்தல்

முதலியன சரியையாகும்.

## கிரியை.

சிவசொரூபமாகிய சகளவடிவத்தை அந்தர்முகத்தில் பரோக்ஷமாகத் தியானிப்பதற் கேதுவாகிய ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை ஞான சாஸ்திரங்களாலேனும் ஞானாசிரியராலேனும் உணர்ந்து தம் உபாசனாமூர்த்தியைப் புருவமத்தியில் நிறுத்தித்தியானித்து ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை மத்திமை, பைசந்தி, சூக்மை எனும் வாக்கு மூன்றில் ஒன்றால் செபிப்பது கிரியையாகும். இந்தக் கிரியையாளர்கள் மேற்கூறிய சரியாபாதங்களையும் அனுஷ்டிக்கவேண்டும். ஆதலின் சரியை, கிரியை இரண்டும் ஞானாசிரியரிடத்துப் பணிபுரிவோர்க்கே பயன்படுவதாகும்.

## யோகம்.

பிராணவாயுவை ரேசகபூரகஞ்செய்து கும்பகத்திலிருப்பது யோகமாகும்.

## ஞானம்.

யோகமுடிவில் நிர்விகற்ப நிலையை அடைந்து ஆந்தரநிலையில் பிர்மசொரூபத்தை அறிவதாகும்.

## பதவிகள்.

சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் என நான்காகும். இவற்றுள்,

சாலோகம் சிவலோகத்தில் வசிப்பதாம். சாமீபம் பரமேஸ்வரனுக்குப் பக்கத்தில் வசிப்பதாகும். சாரூபம் பரமேஸ்வரனது

அனந்தவடிவங்களில் ஒன்றை பெற்றிருப்பதாம். சாயுச்சியம் பரமேஸ்வரனது ஏகான்ம சொரூபத்தில் இரண்டறக்கலப்பதாம். இதில்,

| | |
|---|---|
| சரியை செய்தவர் | சாலோகத்தையும் |
| கிரியை செய்தவர் | சாமீபத்தையும் |
| யோகஞ் செய்தவர் | சாரூபத்தையும் |

யோகமுடித்தவர் மரணத்தை அறவே யொழித்து அபரோக்ஷ ஞானத்தால் பிர்ம நிஷ்டாபரராகி மோக்ஷ ஞானமாகிய பிர்மைக்யங்கூடுவர். இதுவே பிறப்பிறப்பற்ற முத்தியாகிய சாயுச்சிய பதவியாகும்.

இத்தகைய முத்தியைத் தருவதாகிய அபரோக்ஷ ஞானத்தைப் பதினாறு வயதிற்குமேல் முப்பது வயதிற்குள் பெறுவது முறையாகும். யோகசாதனம் தொடங்குவதுமுதல் ஏறக்குறைய இருபது வருடங்களுக்குள் சித்தியாகி மலஜலமற்று நிர்விகற்ப நிலைகூடும். ஆதலின் யோகசாதனம் தொடங்குவது நாற்பது வயதிற்குள்ளே தொடங்கி அறுபது வயதிற்குள்ளே சித்தியாகும். அறுபது வயதிற்கு மேற்படின் சரீரம் தளர்ச்சியடைவதால் யோகம் சித்தியாகாது மரணத்திற் காளாவர். இதனை,

"மூடரே வயதோடி தளாடிய
நாளிலேயென ரேசக பூரக
மோசமேவரும் நோய்பிணி யாலு டல் மீளாதே"
"சாகுநாளையி லேசிவ னேயென
ஓதினல்விடு மோதலை மேல்விதி
சாடவேவரு மேமப டாளர்க டாழ்வாரோ"

என்னுமிவைகள் அறிவுறுத்துவதால் இறைவனை வழிபடுதற்கு பதினாறு வயதே தக்க பருவகாலமாகும். அப்பருவகாலத்தை மனம்போன வழியே திரிந்து வீணாகக்கழிக்காது பரமாசிரியரது திருவடியை அடைந்து ஒருமையுடன் பணிபுரிந்து புலன்பெற வேண்டும். இவ்வுண்மையைப் பதஞ்சலி முனிவர்க்கு ஞானத் திருப்புகழில்,



"சாலவேபதி னாறுள வாயடை
யோகமானது வாகு முனூறு
சாமிகாரிய மியாபக நாள்வழி ... தானாகும்"

"காலதாமத மாயரை நாழியும்
வீணிலேதிரி யாமன னேரொடு
காணுதேசிக னாரிரு சேவடி ... காணீயே"

என்பதனாலுணர்க.

## அறிஞருரை.

வாழி சோபனம் வாழிநல் லன்பர்கள்
சூழ வந்தரு டோற்றமுஞ் சோபனம்
ஆழி போலரு ளையன் மௌனத்தால்
ஏழை யேன்பெற்ற வின்பமுஞ் சோபனம்.

## உபதேசக் கட்டளை முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

